*Kumaraṉ*

*Āram 8, muttu 6*

*September 25, 1930*

Record no. 313

Reg. No. M. 1823. 20 பக்கங்கள். விலை 0-1-6.

# குமரன்

The "KUMARAN" Published Every Thursday.

ஆரம் அ } காரைக்குடி பிரமோதூத ஸு புரட்டாசி-மீ கூஉ வியாழக்கிழமை (25—9—1930.) { முத்து கூ



இந்த "பாத்பயிண்டர்" டயர் குறைந்தவிலையை உடையது. மிகவும் சிரேஷ்டமானது. நன்கு ஓடுவதிலும், பார்வையிலும், அமைப்பிலும், உழைப்பிலும், சரியான விலையில் எளிதாகக் கிடைக்கிறது என்பதை காண்பித்திருக்கிறது. பெரியதாயும், அழகானதாயும், கனத்ததாயும், கெட்டியான ஓரங்களையும் உடைய இந்த டயரை கவனியுங்கள்.

73

# THE NEW

# Pathfinder

## by GOODYEAR

1-PN-16

வாரப்பதிப்பு.

சந்தா விபரம்

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௩-0-0
ஆறு மாதம் ௧-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௬
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. ௪-0-0



# குமரன்



"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப்பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. 0-௧௨-0
வெளிநாடு வருடம்
ஒன்றுக்கு ௧-0-0
ஆங்கில வருடாரம்பம்


எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

என்னிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

## திருச்சிரை
## மகாநாட்டு முகவுரை.

திருச்சிரையில் செப்டம்பர் 21தேதி கூடிய கும்பகோணம் தாலூகா சுயமரியாதை மகாநாட்டில் காரைக்குடி திரு சொ. முருகப்பர் அவர்கள் தலைமை வகித்துப் பேசியதின் சுருக்கம் வருமாறு—

அன்பர்களே!

என்னை இம் மகாநாட்டிற்குத் தலைமை வகிக்கும்படி கேட்டுக்கொண்டதற்கு வந்தனமளிக்கின்றேன். நாங்கள் வரும் வழியில் காவேரியாற்று நீரானது பல கால்கொண்டு பாய்வதும், நெற்பயிரானது குலைதாங்கிச் செழித்து வளர்வதும் இத் தென்னஞ் சோலையின் வளமார்ந்த பயனும் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகின்றன. நீர்வளமும் நிலவளமும் நிறைந்த இப் பிரதேசத்தின் அருமை எவராலும் பாராட்டப்பட வேண்டியதாகும். இந் நிலங்களில் நெற்பயிரையாவது, தென்னைகளையாவது பயிர் செய்யப்படாமல் கள்ளியும் கற்றாழையும் முளைத்து முட் செடிகள் மலிந்து தழைத்திருக்குமானால் நாம் பாராட்ட முடியுமா? அதனால் மக்களுக்கு ஒரு பயனுமில்லாதொழிவதோடு மக்கட்குப் பெருந்துன்பங்களும் விளையுமன்றோ? காவேரியாற்று நீரைப் பயன் படுத்திச் செந்நெல் விளையும் நஞ்சை நிலங்கள் சிறந்து விளங்குகின்றன. என்றாலும் ஈண்டுள்ள மக்களின் மனமானது இந் நிலையை யடையவில்லை. அவர்களுடைய மனத்தில் கள்ளியும் கற்றாழையும் முட் செடிகளும் போன்ற குணங்கள் முளைத்திருக்கலாயா? அம்மாதிரியான நிலையைச் சீர்படுத்திப் பயனுக்குரிய பயிரை விளைவிக்க வேண்டுமென்பதே நமது இயக்கத்தின் கருத்தாகும். தமிழ் நாட்டில் பிறந்த மக்கள் ஒவ்வொருவரும் பாடு படுவதிற் குறைவில்லை. என்றாலும் கஞ்சியும் துணியும் கிடையாமல்பலகோடிமக்கள் வருந்துகின்றனர். இவ்வளவு பெயருடைய முயற்சியும் சம்பாதிக்கும் பணமும் எங்கே போகிறதென்பதை யுணரவேண்டும். பலருடைய வாழ்விற்கு சுயமரியாதை இயக்கம் தீமை செய்கிறதென்று கூறப்படுகின்றது. ஒருமுயற்சியும் செய்யாமல் மக்களை ஏமாற்றி பணம் பிடுங்கி வாழ்பவனுக்கு இவ்வியக்கத்தால் கஷ்டமேற்படுதல்கூடும் அவனும் ஏதாவது நேரான வழியில் முயற்சி செய்ய ஆரம்பித்தால் சுயமரியாதை இயக்கம் சாதகம் செய்யுமென்பதில் ஐயமில்லை. தாங்களும் மனிதர், மற்றவரும் மனிதர் என்று எண்ணுகின்ற ஒவ்வொருவருக்கும் சுயமரியாதை இயக்கம் மகிழ்ச்சி தருவதாகும். தங்களைத் தேவரென்று நினைப்பவருக்கும் பிறரை மிருகமென்று கருதுபவருக்கும் இவ்வியக்கம் நஞ்சாக விருப்பதில் ஆச்சரியமொன்றுமில்லை. பலநூற்றாண்டுகளாக வழக்கத்தில் வந்திருக்கும் விஷயங்களை எங்களால் ஒழிக்க முடியாது என்று சிலர் வீரம் பேசுகின்றனர். இம்மாதிரி கூறுவது சிறுபிள்ளைத்தனமாகும். இச்சீர்திருத்தங்கள் எங்களுடைய ஆயுட்காலத்தில் நிறைவேறுமென்றாவது நிறைவேற வேண்டுமென்றாவது நாங்கள் கருதவில்லை. உண்மைவெற்றி பெறும். உண்மையை வெளிப்படுத்துவது எங்கள் கடமையென்றுதான் கருதுகின்றோம். சமர்த்தனாக இரு என்று நாங்கள் சொன்னால் அதைக்கேட்பவர்கள் "நாங்கள் எத்தனையோ காலமாக முட்டாள்களாக விருந்து வருகிறோம் எங்களைத்திருத்த உங்களால் முடியுமா" வென்று கேட்பார்களேயாயின் எவ்வளவு பொருளுண்டோ, அவ்வளவுதான் மேற்கூறியதிலு முண்டு. இவ்வியக்கத்துக்கு வெற்றியென்றால் அது ஜனங்களுடைய வெற்றி. தோல்வியென்றாலும் அது ஜனங்களுடையதே. இரண்டும் நம் முடையதல்ல.

முக்கியமாக நாம் கவனிக்கவேண்டுவதொன்றுண்டு. வித்தியாசங்கள் அதிகரித்து விட்டன. சமயங்களும் ஜாதி வகுப்பும் சேர்ந்து மக்கள் மனத்தைப்பிரிவின் வசமாக்கி விட்டன. ஜாதி பேதமும் சமயபேதமும் வளர்ந்து வளர்ந்து ஊர் ஒற்றுமை யென்பதே ஒழிந்து வேற்றுமையைத்தவிர வேறொன்று மில்லாத நிலைக்குப்பழகி விட்டனர். சைவம் வைணவம் என்றால் அந்தந்த மதத்தினர் ஒரு கூட்டமாக இருக்கவேண்டும். அது கிடையாது. அதற்குள் ஜாதிபுகுந்து ஒருஜாதிக் கொருஜாதி உயர்வென்ற நிலை வளர்கிறது. அப்படியேஒவ்வொரு ஜாதியார்களும் குலத்தில் உயர்ந்தவன் கோத்திரத்திலுயர்ந்தவன் குடும்பத்தில் உயர்ந்தவன் என்று கட்சிபிரித்துப்பிரித்து ஒருவருடன் ஒருவர் சமப்பட முடியாமல் சண்டையையும் பிரிவையும் தானே வளர்க்கின்றனர். இப்படிவேற்றுமையில் பழகிய மக்கள் எதிலும் வேற்றுமைப்படவே முன் வருகின்றனர். இதனால்தான் தமிழ் நாட்டில் செய்யப்படும் அத்தனை முயற்சிகளும் உருப்படாமற்போகின்றன. இதற்குப்பரிகாரமில்லாவிட்டால் இப்படியே இந்நாட்டு மக்கள் புழுவாக நெளிந்து துன்பப்பட்டு அழியவேண்டியதைத்தவிர வேறு வழியில்லை. இத்தனை வேற்றுமைக்கும் மூலதாரமாக இருப்பது ஜாதி சமய வேற்றுமையேயாகும். அதனால் தான் அதனைத்துலாக்கவேண்டுமென்கிறோம். நிலம மட்டமாகஇல்லை, மேடுபள்ளம சமனாகவேண்டும். சமனாகுமுன்னர் தண்ணீர் பாய்ச்சுவதும பயிர் செய்வதும் முடியாதகாரியமாகும். மேலிருப்பவன் கீழிறங்கமாட்டேனென்கிறான். மற்றவன் தனக்குச்சரியாக இருப்பதைக்கூடப் பொறுக்கமாட்டேனென்கிறான். அதுமட்டுமல்ல, எவனை உயர்த்தவேண்டுமென்கிறோமோ அவனே நம்முடன் மல்லுக்குவருகிறான். உயர்வது பாவம் என்று அவன் மண்டையில் ஏற்றியிருக்கிறார்கள். எப்படியும் நமமுடைய வேலை பெரிதுதான். எனினும் செய்துதான் ஆகவேண்டியிருக்கிறது

மூடத்தனத்திற்குத் தீராத ஸ்தாபனங்களை உண்டாக்கி வளர்ப்பவர்கள் நாட்டுக்கோட்டையார்தான் என்று ஒரு நண்பர் சிறிது முன்பு கூறினார். அவர்கள் மேல் குற்றமிருப்பதாகத் தெரியவில்லை. அவர்களைப் பார்ப்பனர் ஒழுங்கு செய்து கையில் வைத்திருக்கின்றனர். கல்லினாற் பணிகள் செய்வோர் கைலை விட்டகலாரன்றே. என்று சொல்வதை நம்பியிருக்கின்றனர். பரமசிவனுடன் கைலாசத்தில் சரிசமமாக அழியாப்பதவி பெற்றிருப்பதை வேண்டாமென்று கருத முடியுமா? பார்ப்பனரும் பரதேசிகளும் தங்கள் பக்கத்தில் அவர்களைச் செம்மையாகத் திருப்பி வைத்திருக்கின்றனர். சுயமரியாதை யென்பது நாஸ்திகம், கேட்டாலும் பாவம் என்று அவர்கள் மூளையில் சரியாக ஏற்றி வருகின்றனர். நம்முடைய பிரசாரம் சரியாக இன்னும் நடைபெறவில்லை. உண்மை அவர்கட்கு எடுத்துச் சொல்லப்பட்டால் அவர்கள் நமமுடைய பக்கம் திரும்புவது திண்ணம். இப்பொழுதே பார்ப்பனரும் சைவ மூட்டைகளும் செய்யும் ஒழுங்கீனங்களை அநுபவத்தில் சிறிது சிறிதாக உணர்ந்துதான் வருகின்றனர். பணத்தைச் சம்பாதித்தால் ஒரு பகுதியைத் தருமம் செய்யாமல் இருக்க மாட்டார்கள். ஆனால் தரும மென்பது கோயில் கட்டுவது பசுமடம் கட்டுவது சத்திரம் போடுவது பாடசாலை அமைப்பது பார்ப்பானுக்குப் போட்டமுவது என்றுதான் நம்பி யிருக்கின்றனர். அப்படியேதான் ஐயர்மார் அவர்களுக்குப் போதித்திருக்கின்றனர். ஆஸ்பத்திரியும் ரோடும் கல்விச்சாலையும் தருமமென்று அவர்களில் பலருக்குத் தெரியாது. இதை உணர்த்த வேண்டியது சுயமரியாதைக்காரருடைய கடமையாகும், உணர்த்தப்பட்டால் இந்தப்பக்கம் திரும்புமென்பதில் ஐயமில்லை.

கோயிலைப்பற்றியும் விக்கிரகங்களைப்பற்றியும் பல நூற்றாண்டுகட்கு முன்பே பல அறிவாளிகள் கூறியிருக்கின்றனர். "நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுஷ்பஞ் சாத்தியே சுற்றிவந்து மொணமொணென்று சொல்லும் மந்திரம் ஏதடா" என்றும், "வீட்டிலே உள்ளவர்கள் ஒருமனதாய்க்கூடியே தேரிலே வடத்தைப் போட்டுச் செம்புவைத்திழுக்கிறீர்" என்றும், "காசி காசி யென்று நீர் காங்கடுக்க ஓடுகிறீர் காசியோடி ஆடினும் கறுப்பு வெள்ளை ஆகுமோ" என்றும் சிவவாக்கியர் என்னும் சித்தர் கூறியிருக்கிறார். பொய் யென்று சொல்லாமல் ஏடுகளை ஒப்புக்கொள்பவர்கள் இதையொப்புக்கொள்ளத்தானே வேண்டும், தப்பமுடியுமா? இப்படிச் சொன்னவர் சிவவாக்கியர்; சிவபெருமான் இவர் வாக்கில் இருந்து சொன்னாரென்று கதை சொல்லப்படுகிறது. அதைத்தான் நாம் இன்று சொல்கிறோம். ஒன்றும் புதிதல்ல. ஒவ்வொரு காலத்திலும் இந்த உண்மையைக்கண்டு அறிவாளிகள் வெளிப்படுத்தியேயிருக்கின்றனர். என்றாலும் அந்தந்தக் காலத்தில் இருந்த பார்ப்பனரும் சைவ வைணவ மதவெறி கொண்டவர்களும் ஜனங்களை மிரட்டி யேமாற்றி மோசஞ் செய்திருக்கின்றனர். பல சந்தர்ப்பங்களில் அரசர்களைக் கையிற் போட்டுக் கொண்டு கண்ணைப் பிடுங்கியும் கழுவில் போட்டும் வெட்டிக் கொன்றும் அறிவாளிகளை ஒழித்திருக்கின்றனர். இன்றும் ஒரு சைவனாவது ஒரு வைணவனாவது ஒரு பார்ப்பான அடிமையாவது இந்த நாட்டை அரசாள்வானாயின் நம்மையும் ஒழித்து விடத்தான் முன்வரக்கூடும்.

பார்ப்பானுக்குச் சோறு போட்டுப் பணங்கொடுத்து அவன் காலில் விழுந்து கும்பிட்டால் பிள்ளை பிறக்குமென்றகதை 1930ல்இந்தியாவில்தான் இருக்கிறது. பார்ப்பானுக்குப் போடுவது புண்ணியமென்று எழுதியதைப்பார்த்து சைவன் பிள்ளையை அறுத்து உப்பு புளி போட்டுச்சமைத்து சிவனடியாருக்குப் பரிமாறினால் முக்தி யென்றும், பெண்டாட்டியைச் சிவனடியாருக்கு விட்டால் முக்தி யென்றும் எழுதிவைத்தான். இவ்விஷயத்தில் வைணவனும் சளைக்கவில்லை. எல்லாருங்கூடி தங்களுக்கு இந்த நாட்டு மக்கள் மீளாத அடிமைகளாக இருந்து உழைத்துப்போட்டழுக வேண்டுமென்றே கங்கணங்கட்டி நூலெழுதி அநுபவத்திற் கொண்டு வந்திருக்கின்றனர். நாட்டுமக்களுடைய பொருள் முழுமையும், அவர்களுடைய முயற்சி முழுமையும் பார்ப்பானுக்கும் பரதேசிக்கும் கோயிலுக்கும் சடங்குக்குமாகத் தொலைகின்றன. இதற்குப்பரிகாரமில்லாத வரை மக்கள் வேறுகாரியத்துக்கு அணுவளவு கூட உபயோகப்படமுடியாது. அவர்களுடைய பொருளும் பயனுடைய வழிக்கு வரமுடியாது.

நாட்டைவிட்டுத்
# தீண்டாமை ஒழிக.

சிறையிலிருக்கும் மகாத்மா காந்தி தன் வாரக்கடிதங்களொன்றில் தீண்டாமையைப் பற்றி இவ்வாறு எழுதுகின்றார்:—

தீண்டாமை என்பது தொடுவதனால் ஏற்படும் அசுத்தமுடைமையைக் காட்டுகின்றது. எங்கெங்கு இடங்களில் தீண்டாமை நிகழ்கின்றதோ அந்தந்த இடங்களில் பொருளற்ற வெளியாசாரம் எழும்பி மதத்தின் உண்மையைக் கொன்றழித்துவிடுகின்றது. உலகிலுள்ள எல்லா ஆன்மாக்களும் அரியபெரிய ஓர் பேரொளியின் பகுதியேயாகையினால் பூமியில் தீண்டத்தகாதவர் என்பதே கிடையாது. ஒரு பிணத்தைத் தொடுவதில் காட்டுகின்ற சங்கோசம் தவறானதாகும். சவத்தைத் தொட்டபிறகும் க்ஷவரம் செய்து கொண்டபிறகும் ஸ்நானம் செய்து கொள்ளுவது சுகாதாரத்தைப்பொறுத்ததேயாம். அவ்வாறு குளியாத ஒருவனை அசுத்தமானவன் என்று கருதலாமே தவிர, பாவியென்றுஎண்ணலாகாது. ஒருதாய் கூடவும் தன் குழந்தையின் மலஜலத்தை மாற்றிய பின்னர் நீர்மூழ்காமலோ கைகால்களை சுத்தம் செய்யாமலோ இருந்தால்தீண்டத்தகாதவளாகக்கருதப்படலாம். ஆனால் குழந்தையானது வேடிக்கையாக அவளைத் தொட்டுவிட்டதானால் அசுத்தமாகி விடாது. பஞ்சிகளும் (Banjis) சாமர்களும் (Chamars) தினமும் நீர்மூழ்கினாலும், தூய ஆடைகளை அணிந்தாலும் பகவத்கீதையை பாராயணம்செய்தாலும் உயரிய ஜீவிதம் நடத்தினாலும் பிறப்பினாலுயர்வு தாழ்வு கற்பித்து தீண்டத்தகாதவராக கருதப்படுகின்றார்கள். இஃது மதமேயன்று, மதத்துக்குமாறானதாகும். அதனை ஒழிக்கவே வேண்டும்.

தீண்டாமை ஓர் நாசகாமான பாவமான மூடக்கொள்கையாகும். இது இந்துமதத்தைப் பாழ்படுத்திக் கொண்டிருக்கின்றது. அதனை அழிக்க முயல்வது ஒவ்வொரு இந்துவுடையவும் கடமையாகும். தீண்டாதவர்களோடு சகோதரர்கள் போல் பழகியும், அவர்கட்குத் தொண்டு செய்தும், அன்பினால் அவர்களை தொட்டும், பொறுமையோடு உதவிபுரிந்தும், அவர்களை அறியாமையிலிருந்து விடுவித்தும் ஒவ்வொரு ஹிந்துவும் இக்கொடிய வழக்கத்தைத் தூரத்த முற்படலாம். இவ்விதப் பாரமார்த்திகஉணர்ச்சியோடுதீண்டாமையை தவிர்க்க முயன்றால்அதன் இவ்லௌகிக,தேசியமுட்டுக்கட்டைகள் ஆழ்ந்து கெட்டுப்போம். தீண்டாமை சுவர்க்கவாய் சென்று தொல்லைப்படுத்துவது கொஞ்சமல்ல. அதனை சிரமேற்கொண்டு உயிர்வாழ்பவர் பூமிக்கு வெறும் பாரமேயாம். நாம் தீண்டத்தகாதவர்களோடு சினேகிதர்களாய் பழகினால்மட்டிலும் போதாது; அவர்களை நம்மைப்போல்(நம்ஆன்மாவைப்போல்) கருதவேண்டும். தீண்டாமையை ஒழிப்பதென்பது ஒரு மனிதனுக்கும் இன்னொரு மனிதனுக்கு மிடையிலும் பலதரப்பட்ட மக்களுக்கிடையிலும் இருக்கின்ற தடைகளை உடைத்தெறிவதாகும். இத்தகைய தடைகள் உலகில் எந்தப்பகுதியிலும் காணப்படுகின்றது. என்றாலும் நம்மையே அதுபெரிதும் பாதிக்கின்றது. ஏனெனில்நாம் அதனை மதத்தினால் உத்தரவளிக்கப்பட்ட ஒரு முறைஎன்று எண்ணுகின்றோம். அந்தோ! இக்கொடிய தீண்டாமை எத்தனை கோடிமக்களை அடிமைத்தனத்தி லாழ்த்திவிட்டது!

---

ஒரு காகமானது வருஷ மொன்றுக்கு 70,000 பூச்சிகளைக் கொன்று தின்னுகிறதென மதிப்பிடப் படுகிறதாம்.

---

# ஜப்பான் சிறுவர்கள் சுயமரியாதை மிக்கவர்களா?

## காரணமென்ன?

"தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பது தமிழ்நாட்டு மூதுமொழிகளில் ஒன்று. சிறுவயதில் குழந்தைகள் எவ்வாறு நடத்தப்படுகின்றார்களோ அவ்வாறு அவர்களுடைய வாழ்க்கையும் அமையும். சிறுவயதில் தைரியமும் ஆண்மையும் போதிக்கப் படுவதாயிருந்தால் ஒருவனுடைய ஜீவிதம் முழுவதிலும் அவன் ஆண்மையுடனும் தைரியத்துடனும் வாழ்க்கை நடாத்துவான். அன்றி வெறுப்பாகவும் எப்போதும் குறைகூறியும் இழிவுபடுத்தியும் நடாத்தினால் ஒருவன் ஜீவிதம் முழுவதிலும் சுயமரியாதை உணர்ச்சி யழிந்தவனாகவும் மானமிழந்தவனாகவும் பகுத்தறிவு நீங்கியவனாகவுமிருப்பான். இதனை உணர்ந்து நம் நாட்டுப் பெற்றோர்கள் குழந்தைகளைப் பேணும் விஷயத்தில் கவனஞ் செலுத்துவதில்லை. அவ்வாறே ஆசிரியர்களும் தம்மாணவர்களை ஒழுங்கானமுறையில் நடாத்தி சீரான விஷயங்களைப் போதிப்பதில்லை. மாணவர்களை அடித்தும், திட்டியும், ஆக்ஷேபித்தும் இரத்தம் சிதற உதைத்தும் பாழாக்கிவிடுகின்றார்கள்; ஓயாதொழியாது மாணவர்களை இகழ்ந்து பேசி ஒன்றுக்குமுதவாதவர் என்ற போதனையைப் புகட்டி நம்மிளஞ்சிறார்கள் இதயத்தை, உணர்ச்சியை, சுயமரியாதையை அழித்துவிடுகின்றார்கள். நம் நாட்டார் சுயமரியாதை உணர்ச்சி குன்றி தன்நம்பிக்கையற்று கோழைகளாயிருக்கின்றார்களென்றால் அதற்கு மேற்குறித்தது ஓர் முக்கியகாரணமாம். ஜப்பானிலுள்ளமக்கள் இவ்வுண்மையையறிந்து தம் பிள்ளைகளை மிக உத்தமமான முறையில் கையாடி வருகின்றார்கள். ஆகவே அவர்கள் நல்லுணர்ச்சி மிகுந்து மேலான மக்களாய் உயிர்வாழ இடமேற்படுகின்றது. இதற்குதாரணமாக, ந்யூ இந்தியாவில் எல்லா டார்லிங்டன் என்பவர் எழுதியிருப்பதன் ஓர் பகுதி வருமாறு:—

ஜப்பான் சிறுவர்களுக்கு எவ்வித சரீரசம்பந்தமான தண்டனையும் கொடுக்கப்படுவதில்லை. நான் இரண்டு வருஷம் ஜப்பானில் வசித்துவந்தேன், பல இடங்களையும் சென்றுபார்த்து மிருக்கின்றேன். ஓரிடத்திலாவது ஒருகுழந்தை தண்டிக்கப்பட்டதாக நான் காணவாவது, கேட்கவாவது, படிக்கவாவது, இல்லை. ஜப்பானியர் தங்கள் குழந்தைகளை இவ்வாறு நடத்துவது அவர்கள் கடவுள் பிறப்புஎன்றகருத்தினாலல்ல. அவர்கள் பொறுமை,போதனை,சிறிதுகண்டித்தல், விஷயம் விளங்கக் கூறுதல், வாதிட்டு அறிவுறுத்தல் ஆகியவைகளால் உடலுக்கு ஊறு செய்து கற்பிப்பதைவிட ஒருகுழந்தையின்துர்க்குணத்தை எளிதில் அழித்து விடலாமென எண்ணுகிறார்கள். சீனத்தாய்மார்தங்கள் குழந்தைகளை சவுக்கினாலடிப்பதை ஜப்பான் பெண்மணிகள் மிகுந்த வியப்புடனும் திகைப்புடனும் திறந்த கண்களோடு பார்த்துக்கொண்டிருப்பார்களென்று டோக்கியோவிலிருக்கும் ஒரு நண்பர் எனக்குச் சொன்னார். ஜப்பான் பள்ளிக்கூடங்களிலும் சரீரசம்பந்தமான தண்டனையென்பது காணக்கிடையாது. நான் ஒருநாள் சுமார் 16 வயதான ஒரு மாணவரிடம் ஒருபையன் பள்ளிக்கூடத்தில் தகாதமுறையில் நடந்துகொண்டால் அவனுக்கு என்ன ஏற்படுமென்று கேட்டேன். அவன் சிறிது கோபவியப்புடன்விழித்தான். அப்பால் உபாத்தியாயர் அத்தகைய மாணவனை வகுப்பில் கதவுக்கு வெளியே நிற்கச் சொல்லுவார் என்று பதில் கூறினன். ஒரு குறைக்குவார்த்தை பந்தனம் ஒரு மாணவியைத் தண்டிக்கப் போதியகருவியாம். சென்ற வருஷம் ஒரு ஐஸ்கூல் மாணவியை ஒரு உபாத்தியாயர் நகைத்ததற்காக கண்டித்துப்பேசியபோது அவள் வீட்டிற்குச் சென்று விஷத்தைக் குடித்துத் தற்கொலை புரிந்து கொண்டாள்.

சண்டையிடுவது ஜப்பானில் ஓர் அபூர்வ சம்பவமாம். நான் ஜப்பானில் 500 மாணவர்களுக் கிடையில் ஒரு வருஷத்தில் நடக்கக் கண்ட சண்டை கானடா (அமெரிக்காவிலுள்ள ஓர் பெரிய ராஜ்யம்) வில் பன்னிரண்டு மாணவர்களுக்கிடையில் ஒரு வாரத்தில் கண்ட சண்டைகளுக்கு சமமாயிருப்பதாக அனுமானிக்கிறேன். வெளிநாட்டார் ஜப்பானுக்குச்சென்று சிலநாட்களுக்குள்தாம் கோபம்கடுஞ்சொல் வெறுப்பு ஆகியவற்றைக்காட்டினால்தன்னைச்சுற்றிலும் ஏராளமாகஜனங்கள்கூடிவிடுவது இயல்புஎன்பதை உணர்ந்துகொள்வார்கள். சீனத் தொழிலாளிகள் வசிக்குமிடங்களில் நமக்கு வசிக்கமுடியாது. ஆனால் மிக ஏழைகளான ஜப்பான் காரர்கள் வசிக்கின்ற பட்டணங்களின் நடுவிற்கூடவும் சங்கோசமின்றி வசிக்கலாம். வீண்சத்தம் இடுவதினாலும் உரக்கப் பேசுவதினாலும், கட்குடித்துக் கூத்துவதினாலும் சண்டையிடுவதினாலும் ஏற்படுந்தொல்லை சிறிதேனுமிராது. அங்கு எழும் மிக வருந்தத்தகுந்த சத்தம் மோட்டார்கார்கள் ரேடியோ முதலிய அந்நிய நாட்டு ஏற்றுமதிச் சாமான்களின் தொனியே ஆகும்.

(அரசாங்கமும் மேற்படி முறைகட்கு உடன்பட்டிருக்கின்றது. ஒரு பாடசாலையின் ஆசிரியர் குழந்தைகள் இங்கிதத்திற்கு மாறாக நடப்பாரானால் உடன் அவர்வேலையை விட்டு நீக்கப்பட்டு விடுவார். நீண்டநாளாக நாடுமுழுதும் இவ்வழக்க மிருப்பதால் சில ஆசிரியர்கள் தாங்கள் வெறுக்கப்படும் போது தாங்களாகவே நீங்கிக் கொள்வார்கள். அப்படிப்பட்ட ஓர் தருணத்தில் சில மாணவர்கள் ஒரு ஆசிரியருக்கு விடுத் கதடிதமாவது.)

ஓழே கையொப்பமிட்டிருக்கும் மாணவர்களாகிய நாங்கள் உங்களை ஓர் பண்டிதரென்று மதிக்கின்றோம், ஆனால் எங்களுக்கு நன்மை பயக்கும்படியான முறையில் நீங்கள் கல்வி போதிக்கவில்லையென்று தெரிகிறது. நாங்கள் எங்கள் படிப்பில் அவ்வளவாக முன்னேறவில்லை. ஆகவே கருணைகூர்ந்து நீங்கள் உங்களுடைய போதனைமுறையை சீர்திருத்திக்கொள்ளவேண்டும்; இன்றேல் கல்லூரியைவிட்டு நீங்கிக்கொள்ளவேண்டும்.

---

டல்கேரியாவில் மேயரின் மகனுக்கு நல்ல "மார்க்குகள்" கொடுக்க வில்லையென்று உபாத்தியாயினியை அந்த மேயர் நன்றாகச் சவுக்கா லடித்தாராம்.

---

ஓர் அரிசியெடையுள்ள ரேடியம் என்னும் ஒளிதரும் வஸ்துவானது 500 டன் எடையுள்ள பாறைமுதலிய எந்த வஸ்துவையும் ஒரு மைல் தூரத்திற்குத் தூக்கி யெறியும் சக்திவாய்ந்ததாம்.

---

காஷ்மீரத்தில்
# தீண்டாமை ஒழிந்தது

பொது ஸ்தாபனங்களில் தீண்டாதார்.

காஷ்மீரத்திலுள்ள (ஜாமு உட்பட) தீண்டாத வகுப்பார் சார்பாக சமர்ப்பணம் செய்யப்பட்ட ஓர் மனுவை அரசர் பரிசீலனைசெய்து விட்டு கீழ்க்காணுமாறு ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கின்றார்.

"நமது நாட்டில் எங்கேனும் தீண்டாத வகுப்பார் பொதுக் கிணறுகள், குழாய்கள், குளங்கள் இவற்றை உபயோகிக்கலாகாதென்று தடையிருக்குமானால் அதனை உடனே அழித்துவிடவேண்டும். உயர்ந்த வகுப்பார் இவ்வேற்பாட்டுக்கு மாறாக முட்டுக்கட்டை போடுவார்களானால் அவர்களைச் சீர்திருத்துவதிலும் பிரத்தியேககவனம் செலுத்தப்பெற வேண்டும். தீண்டாத வகுப்பார் எவ்விதமான குறைபாடுகளுமுடையவர்களல்ல. அவர்களுடைய கல்வி விஷயமான பிற்போக்கை ஒழிப்பதற்கு இவ்வருஷம் நூற்றுக்கு நூறு உதவிச் சம்பளம் கொடுப்பதென்று சட்டம் செய்யப்பட்டிருக்கின்றது. பொது ஸ்தாபனங்களில் இவர்கட்கு உத்தியோகங்கொடுக்க எவ்வித தடையுமிருக்கலாகாது."

---

## நோட்டீஸ்.

தேவகோட்டை சப் கோர்ட்.

S. C. No. 108—30.

கருலூர் அருணசலமய்யர் 1 } வாதிகள்
அண்டக்குடி முத்தாரமன் செட்டியார் 2

அனுமந்தக்குடி தாலூகா கன்னரியேந்தல் துரைசாமி ஐயர் ஸ்வீகார குமார் சாமிநாதய்யர் } பிரதிவாதி

ஷை பிரதிவாதிக்கு:—

நீர் ஷை வாதிகளுக்கு 27-4-27-ல் ரூ. 312-க்கு எழுதிக் கொடுத்திருக்கும் முக்கால் வட்டி பிராம்சரி கோட்டின்படி வரவேண்டிய வட்டி முதல் தொகை ரூபா 400-ஐ வரப்பற்ற வாதிகள் உம்முடையபேரில் வியாஜ்யம் செய்து அதன் பைசலுக்காக 29-9-1930ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது. அது விஷயமாக உமக்கு ஏதாவது ஆக்ஷேபணையிருந்தால் நீர் ஷை தேதி காலை 11 மணிக்கு ஷை கோர்ட்டு முன்பாக ஆஜராகி தெரியப்படுத்திக் கொள்ளலாம்.

R. Satyamurti Iyer,
தேவகோட்டை } வாதிகள் வக்கீல்.
17—9—1930 } 130-T





அமராவதிபுதூர்
# காந்தி பெண்பாடசாலை.

## நான்காவதாண்டுவிழா.

(நமது நிருபர்)

ஷை பெண்பாடசாலையின் நான்காவதாண்டு நிறைவு விழா புரட்டாசி மீ 4 உ பிற்பகல் நான்கு மணிமுதல் பள்ளத்தூர் மிஸஸ் அப்பையா பி. ஏ. அவர்கள் தலைமையில் பள்ளிக்கூடத்திற்கு முன்னர் அலங்கரிக்கப்பெற்றிருந்த கொட்டகையில் நடைபெற்றது. உள்ளூரிலிருந்தும், அயலூரிலிருந்தும் ஏராளமான ஆண்களும் பெண்களும் விஜயம் செய்திருந்தனர். தலைவியவர்களை அசோக விலாஸ் பங்களாவிலிருந்து அழைத்து வந்தவுடன் மாணவிகள் வாழ்த்துப் பாடினர். பின்னர் பாடசாலை நிர்வாகஸ்தர் திரு. ஆ. சொக்கலிங்கம் அவர்கள் நான்காவதாண்டு அறிக்கையைப் படித்தார்கள். அதில் குறிப்பிடப்பட்டதின் சுருக்கம் வருமாறு:—

இப் பள்ளிக்கூடம் அக்ஷய வருஷம் புரட்டாசி மாசம் ௩௨ தேதி ஆரம்பிக்கப்பட்டது. இப்பொழுது இக் கல்வி நிலையத்திற்கு நான்கு ஆண்டுகள் பூர்த்தியாகின்றன. இப்பாடசாலையில் பாலர் வகுப்பிலிருந்து ஆறுவது வகுப்புகள்வரை உள்ளன. இங்கு நாற்பது குழந்தைகள் படிக்கின்றனர். சராசரி நூற்றுக்கு எழுபது வீதம் குழந்தைகள் ஆஜராகியிருக்கின்றனர். பிள்ளைகளுக்கு தமிழ்க்கணக்கு, பொருட்பாடம், சரித்திரம், சித்திரம், பூகோளசாஸ்திரம், ஆங்கிலம், தையல், பாட்டு முதலியன கற்பிக்கப்படுகின்றன. குழந்தைகள் சுத்தமாக இருப்பதும் பெரிதும் கவனிக்கப்படுகிறது. தக்ளியில் நூல் நூற்பதற்கும் பழக்கப்படுகின்றனர். மாணவிகள் "மணிமேகலா சங்கம்" என்னும் ஒரு சங்கத்தையும் நடத்திவருகின்றனர். இவ் வருடத்தில் பல அறிஞர்கள் பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டார்கள். திரு. பொ. திருகூடசுந்தரனார் மேல்வகுப்பு மாணவிகளுக்கு "பொது அறிவு" பாடத்தை நடத்தி வந்தார். இங்கு ஆசிரியராக இருந்த திரு. வி. பரமசிவனும், திரு. திருகூடசுந்தரனாரும் தேசிய வேலையில் ஈடுபட்டதின் பயனாக தற்சமயம் சிறையில் இருக்கிறார்கள். தற்பொழுது இங்கு மூன்று உபாத்தியாயர்கள் இருக்கின்றனர். அதில் இந்தப் பள்ளிக்கூடத்தில் படித்த ஒருமாணவியே பாலர் வகுப்பை நடத்திவருவது குறிப்பிடத்தக்கதாகும். இந்த ஆண்டில் இப்பள்ளிக்கூடத்திற்கு ரூபாய் எழுநூறு செலவாகியிருக்கிறது. புதிய ஆண்டில் அதிகமான முயற்சி செய்து நடத்த எண்ணியுள்ளோம். இவ்வருடம் பள்ளிக்கூட மாணவிகள் ஆசிரியர்களைப் பின்பற்றித் தேசிய வேலையில் ஈடுபடத் தொடங்கினர். அதனைக் கண்ட பல பெற்றோர்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப யோசித்தனர். பிள்ளைகள் வெளியில் நடக்கும் கிளர்ச்சிகளில் ஈடுபடுதல் படிப்பிற்கு ஊறு செய்வதாகும், எனவே அவ் வேலைகளில் தலையிடாதிருக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மேலும மேலும் பெற்றோர்கள் பிள்ளைகளை பாடசாலைக்கு அனுப்பி பாடசாலையின் வளர்ச்சியை நாடுவார்களென்று நம்புகிறோம்.

இவ் அறிக்கைக்கு அப்பால் கூட்டத் தலைவி முகவுரையாகப் பேசினர். அதன் சுருக்கம் வருமாறு:—

நான் இங்கு அக்கிராசனம் வகிக்க இசைந்ததற்கு மூன்று காரணங்களுண்டு. ஒன்று உயர்ந்த மனிதராக விளங்கும் காந்தியின் பெயரால் ஸ்தாபிக்கப்பெற்றிருக்கும் இந்தக் கலாசாலையைப் பார்வையிடவேண்டுமென்பது; இரண்டு, பெண் கல்வி குறைந்திருக்கும் இந்தச் செட்டிமார் நாட்டில் அதனை அபிவிருத்தி செய்ய என்னாலான உதவிகளைச் செய்யவேண்டுமென்பது; மூன்று பல ஊர்களுக்கும் சென்று பலருடன் பழகி வேண்டும் உதவிகளைச் செய்ய எனக்கிருக்கும் ஆவலைக் காட்டவேண்டுமென்பது. இப் பள்ளிக்கூடம் காந்திஜீயின் பெயரை வைத்திருந்தால்மட்டும் போதாது. அவருடைய கொள்கைகளைச் செயலில் காட்ட நாம் மிகவும் பிரயத்தனப்படவேண்டும். அந்த உத்தமர் நம் காலத்திலேயே நம்முடன்வசிக்கிறார். அவரைப் போற்றி அவர் பெயரால் நடத்தப்படும் இக் கலாசாலையின் மாணவிகளின் நடிப்பு, கதை, நாடகங்களையும் பார்க்க சீக்கிரம் என்னுடைய முகவுரையை முடித்துக்கொள்கிறேன்.

அப்பால் சானடோத்தான் லேடி பெட்லெண்ட் ஆஸ்பிடல் டாக்டர் ஸ்ரீமதி L. ஸ்டபேன் L. M. P. அவர்கள் "பெண் கல்வி" என்பதுபற்றியும், தேவகோட்டை ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் திரு. சுந்தரமய்யரவர்கள் "செட்டிமார் நாட்டுக் கல்வி வளர்ச்சி" என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

பிறகு மாணவிகள் 'கடற்காட்சி, வெண்ணிலாப் பாட்டு, ஓநாயும் நாய்க்குட்டியும், பசித்த நாய், திருடர்கள்' என்பவைகளை பாட்டுடன் நடித்தனர். 'சுதந்திர தேவி, கார்த்தியடிகள், இளமை மணத்தின் கெடுதி' என்பனபற்றி மாணவர்களின் சொற்பொழிவுகள் நடைபெற்றன. 'கண்ணன் திராதவிளையாட்டுப்பிள்ளை, என்னும் பாட்டையும் 'இஷ்டமே கஷ்டம்' என்பதையும் சிற நடிப்பால் மாணவிகள் காட்டினர். கண்ணனாக தி. சிவகாமி நடித்தது மிகப் புகழத்தக்கதாம். 'பூனைக்கு யார் மணிகட்டுவது?' என்னும் கதையையும் ஆங்கிலத்தில் நடித்தார்கள்.

அப்பால் "இராமனும்-பரதனும்" என்னும் டிராமா நடைபெற்றது. இக்கதையில் தசரதனாக நடித்த சௌந்திரத்தின் நடிப்பும் லெட்சுமணனாக நடித்த சுப்புலெட்சுமியின் நடிப்பும், முதல் மந்திரியாக நடித்த ச. வள்ளியின் நடிப்பும் மிக நன்றாயிருந்தன. நாடகமேடைகளில் காண்பது போன்ற உடைகளுடன் நடிகர்கள் விளங்கினர். இந்நாடகத்தின் பின் மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. அப்பால் தலைவி முடிவுரையாகப் பேசியதன் சாரம் வருமாறு:—

இன்றைய சந்தோஷ விழாவிற்கு வரநேர்ந்தது அதிக சந்தோஷம் தருவதாகும். உங்களுடைய நிகழ்ச்சி முறையில் கொடுத்திருக்கிற விஷயங்களை முழுவதும் நடத்துவதற்குக்காலமில்லாததற்குவருந்துகிறேன். இப்பொழுது நடந்தவைகளை மூன்று மணி நேரம் பார்த்திருந்தும் என்மனம் சலிக்கவில்லை. இங்கு நடைபெற்ற விஷயங்களைக் கவனிக்கும் பொழுது பள்ளிக்கூடம் எவ்வாறு அபிவிருத்தி அடைந்திருக்கிறதென்பதும், ஆசிரியர்கள் எவ்வாறு முயற்சி செய்து கொண்டிருக்கிறார்களென்பதும் நன்கு தெரிகிறது. செட்டிமார் நாட்டில் இவ்வாறு கல்வி கற்று நாடகமும் நடிக்கக் கூடிய திறமைவாய்ந்த பெண்பாடசாலையைப்பார்ப்பதரிது. பிள்ளைகளுடைய பாட்டு, பேச்சு, நடிப்பு யாவும் அளவிலா சந்தோஷத்தை அளித்தன. குழந்தைகளுக்கு சங்கீதம் தனிப்பாடமாகப் புகட்டுதல் நலம். நாடகத்தில் வேடங்களெல்லாம் மிகவும் பொருந்தியிருந்தது பாராட்டத்தக்கது. நல்ல முறையில் பயிற்சி செய்யப்பட்டிருக்கிறதென்பது கண்டுகளித்த அனைவரும் உணரக் கூடியதாகும். இதில் கலக்கட்டி உழைக்கும் கண்பர் சோமசுந்தரம் செட்டியாருக்கும், ஆசிரியர்களுக்கும், அறிபர் சொக்கலிங்கம் செட்டியாரவர்களுக்கும் எனது நன்றியைச் செலுத்திக்கொள்கிறேன். இந்தச் செட்டிமார் நாட்டில் பெண் கல்வி மிகவும் பிரமை நிலையில் இருக்கிறது. ஆதலால் இந்த மாதிரிப் பாடசாலைகள் பல ஊர்களில் ஆரம்பிக்கவேண்டுமென்று இங்கு வந்திருக்கும் பெரியோர்களை நான் கேட்டுக்கொள்கிறேன். இப் பள்ளிக்கூடத்தில் ஆறுவது வகுப்பு வரை இருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இன்னும் சில வகுப்புகளைக் கூட்டி இதனை செகண்டரி ஸ்கூலாக செய்வது மிகவும் விசேஷமான பலனைத்தருவதாகும். பள்ளிக்கூடத்தின் அபிவிருத்திக்குப் பிள்ளைகளின் பயிற்சியே போதியசான்று. என்னைத் தலைமை வகிக்கும்படி செய்த அறிபருக்கு என் வந்தனத்தைச் செலுத்துவதுடன், அவரை இன்னும் பள்ளிக்கூடத்தைச் சிறப்புடன் நடத்தவும் வகுப்புக்களை அதிகப்படுத்தவும் கேட்டுக்கொள்கிறேன்.

திரு. அரு சோமசுந்தரம் அவர்களால் வந்தனம் கூறப்பெற்று வாழ்த்துடன் இரவு 8-மணிக்கு கூட்டம் நிறைவேறியது.

### காந்தியடிகள் திருநாள்.

புரட்டாசி மீ ௨௨ காந்தியடிகளின் திருநாள் அமராவதிபுதூரில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. பகல் ஏழைகளுக்கு அன்னமளிக்கப்பட்டது. இரவு காந்தியடிகளின் படம் ஊர்வலம் நடைபெற்றது.

---

### ஐஸ்லாந்தின் அதிசய ஜீவிதம்.

ஐரோப்பாவில் வட அர்ஸ்லாந்திக் சமுத்திரத்தில் ஐஸ்லாந்து என்ற ஒரு தீவு இருக்கிறது. பார்லிமெண்ட் என்ற அரசாங்க சபை அங்கேற்பட்டாயிரம் ஆயிரம் வருஷம் பூர்த்தியானதை ஒரு சுப மங்களோத்ஸவ தினமாகக் கொண்டாடினார்கள். இவ்வுலகின் பத்திரிகைகள் அதைப்பற்றி வியந்து பாராட்டினர். அதன் நாட்டுமக்களும்,வேல்கம் சேர்ந்த விசித்திரமானதுமாகும். அங்கே ஒரு லட்சம் பேர்கள் வசித்து வருகிறார்கள். அங்குள்ள பிரஜைகள் சகலரும் கல்வி கற்றவர்களே. ஆங்கிலம் ஸ்காண்டிநேவிய பாஷைகளைக் கற்று வர மிகவும்பிரியமுள்ளவர்கள். பெரும் பான்மையோர்க்கு இங்கிலீஷ் நன்றாய்த் தெரியும். குற்றவாளிகளை அங்கே காண்டறிது சென்ற வருஷத்தில் 43 ஆடவர்கள் ஒரு மாதம் குற்றஞ் சாட்டப்பட்டு தண்டிக்கப்பட்டனர்.

18 வயதிலிருந்து 60 வயது வரையுமுள்ள ஆண் பெண்கள், விருத்தாப்பிய உபகார நிதிக்குப் பண உதவி புரிந்து வருகிறார்கள். தரித்திரம் எவ்விதமானதென்று அந்நியர் அறியாமலிருக்கிறார்கள். அங்கே இருக்கிற குழாய்களில் வெந்நீர் தான் வந்து கொண்டிருக்கும். குளிர்ந்த நீர் கிடைப்பதரிது. சுடு தண்ணீரைக் குளிரவைத்துக் குடிக்கலாம். குளிர்ந்த ஐலத்தை ஜனங்களுக்குக் குடிக்கக் கொடுக்க என்ன செய்யலாமென்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். எவ்விடத்திலும் தண்ணீர் கொதித்துக் கொண்டே வெளி வரும்.

---

சர்க்கார் தலையிடுமா தலையிடாதா? கட்டுப்பாடு உண்டா, இல்லையா? விலை ஏறுமா ஏறாதா? ரப்பருக்கு சுபிமோட்சம் உண்டா, இல்லையா? என்ற சந்தேகம் இனி வேண்டாம். விஷயம்துலாம்பரமாய் விளங்கிவிட்டது. சிங்கப்பூர் கவர்னரவர்கள் ஜாவா சென்றதும் டச்சுகவர்னர் ஜெனராலுடன் கலந்து பேசினதும் அரசாங்கத்தார் கண்டிப்பாய் ரப்பர் விஷயத்தில் தலையிட முடியாதென்ற தீர்மானத்திற்கு வந்ததும் வியக்தமாக விளங்கும். இனி நடக்கப்போவதென்ன என்பதைக் கவனிப்போம். பழைய கதைகளைப் பன்னிப் பன்னிப் பேசுவதில் பிரயோசனமில்லை. ரப்பர் ·7 பென்சுக்குக் குறைந்தால் உற்பத்திச் செலவுக்குக்கட்டாது என்றுசொல்லிக்கொண்டிருந்தகாலம் போச்சு. 5 பென்சுக்கும் வந்தது. அதற்குக் கீழே நாலு பென்சளவில் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. இன்றைய விலை 3 15/16 பென்சு. இதற்கும் வெகு கீழே போகலாமென்று நிச்சயமாய் எதிர்பார்க்கவேண்டியது தான். அநேக தோட்டக்காரர்களும் தொழிலாளர்களும் வர்த்தகர்களும் ரப்பர்விலை விழுவதோடு கூட விழவேண்டியது தான். இனி மலாய் நாடு எப்பொழுது தலை தூக்கு மென்றும் சொல்ல முடியாது. செலவுக்கு மேற்கொண்ட ரப்பர் உற்பத்தியை கட்டுப்படுத்த வழியில்லை. மிதமிஞ்சிய சப்ளை இருக்கிற காலத்தில் எப்படி விலை ஒழுங்காய் நடக்கும்? மார்க்கட்டில் நிதானப்பட்டு விலை ஒழுங்குக்கு வரவேண்டுமே யல்லாது வேறு வழியில்லை. அதாவது விலை கட்டுபடியாகாமல் பால் வெட்டுவது நிறுத்தப்படவேண்டும். அதற்கு அநேக தோட்டக் கம்பெனிகளும்

## "இனி மலாய்நாடு எப்பொழுது தலை தூக்கும்?"

முதலாளிகளும் முறியவேண்டும் அந்தத் தோட்டங்களும் பால் வெட்டாமல் புல் மண்டி காடுமண்டிப் பாழாக வேண்டும். அந்த நிலைமைக்கு வர வேண்டுமானால் எத்தனை பங்குதாரர்கள், தோட்டக்காரர்கள், கூலிக்காரர்கள், அவர்களை அடுத்த வியாபாரிகள் முதலிய எண்ணிறந்த ஜனங்கள் பிழைப்பற்று வறுமையடைய வேண்டுமென்பது யோசிக்கத்தகுந்தது. "சர்க்கார் தலையிடமுடியாது. தொழில் தன் நிலைமைக்குத் தானாக வரவேண்டியது தான்" என்று அரசாங்கத்தார் சொல்லிவிட்டதின் தாற்பரியம் இதுதான். சுமாத்ரா, ஜாவாவிலுள்ள அன்றுடம் காய்ச்சிகளாகிய சிறு சுபத்துத் தோட்டக்காரர்கள் பால் விலை பீக்கிள் ஏழெட்டு வெள்ளி விற்றாலும் கூட பால் வெட்டி விற்பார்கள் என்று கூறப்படுகிறது. இப்பொழுது தான் பீக்கிள் டாலர்14-க்கும் கீழ்இறங்கி விற்கஆரம்பித்து விட்டது. ஏழெட்டு வெள்ளி விற்கும் கல்யாணத்தையும் பார்க்க வெகு நாளில்லை, அப்புறம் விலை எங்குதான் போய் நிற்கு மென்பதையும் சொல்லக்கூடவில்லை. இந்த நிலைமையில் எல்லோரும் அதைரியப்பட்டுத் தான் ஆவதென்ன! ஒருவரை மற்றொருவர் குற்றம் கூறித்தான் பிரயோசனமென்ன! அணைகடந்த வெள்ளம் அழுது புரண்டாலும் நிற்கப்போவதில்லை ஆதலால் இனிச் செய்யப்போவதென்ன.

மலாய் நாட்டில் கோடீஸ்வரர்களாகிய தலக்கைகள், தவான்கள், முதலாளிகள் முதற்கொண்டு ஏழைக் கூலிக்காரன் வரையில் காசுபணத்தை லக்ஷியம் செய்யாமல், செலவுசெய்து போகவாழ்வு வாழ்ந்தார்கள் வருமானத்திற்கு மிஞ்சிய வாழ்க்கை வாழ்ந்தாலும் சித்தா விலை ஏற்றமும் இறக்கமும் அதற்கெல்லாம் ஈடுகொடுத்தது. சுலபத்தில் பணக்காரனவதும், பிச்சைக்காரனவதும் சர்வசாதாரணமாயிருந்தது. லாபமும் நஷ்டமும் ஜனங்களுக்கு தினசரிச் சாப்பாடு சாப்பிடுவது எவ்வளவு சாதாரணமோ அவ்வளவு சாதாரணமா யிருந்தது. பங்கு மார்க்கட்டுகளிலும் தரகர்கள் விளையாடிய விளையாட்டோ பெரும் மோசடியான சூதுகளுக்கு மேலாகஇருந்தது. கடவுளுக்கு பயந்தவர்களும் கடவுளை நினைப்பவர்களும் உண்டோ இல்லையோ என்று சந்தேகப்படும்படியான நிலைமையிலும் இருந்தது. தொழுகை ஸ்தலங்களிலும் கடவுள் ஒளிந்து கொண்டிருந்ததாகத் தான் தெரிந்தது. மனிதர்களுடைய மனதிலெல்லாம் சித்தா வெளிச்சமும் ஈயஜோதியும் ஆடியதேயன்றி கடவுள் குடியிருந்ததாகத் தெரியவில்லை மலாய் நாடு முழுவதிலுமே எதிலும் நிதானம், அமைதி, சாந்தம் நிலவியிருந்ததாகத் தெரியவில்லை. சீக்கிரம் பணக்காரனுகவே கிள்ளானுக்குப் பறந்துவந்த காக்கா முதற்கொண்டு எண்ணியதாகத் தெரிந்ததேதவிர வேறல்ல. ரப்பர் இனி சீக்கிரத்தில் நிதானப்படப் போவதில்லை என்பது தீர்ந்த விஷயம். அத்துடன்கூட இந் நாட்டிலுள்ள மக்களின் கதியும் சீர்பட்டுவிடுமென்று நம்புகிறோம். இனி எல்லோரும் கடவுளை நினைப்பார்கள். கொஞ்சத்திலும் திருப்தி அடைவார்கள். சிறு பொருளீட்டு வதற்கும் பெருமுயற்சி செய்ய வேண்டிவரும். பொருள்களின் விலைவாசியும், வியாபாரத்தின் லாப நஷ்டமும் நிதானப்பட்டுவரும். திடும்பிரவேசமாக பணக்காரர்களாவதும் தலைகால் தெரியாமல் திமிரடைவதும், அதீத வாழ்க்கைகள் வாழ்வதும் ஒழிந்துவிடும். ஆதலால் பொதுஜனங்கள் ஆடம்பர வாழ்க்கைகளையும் அநாவசியச் செலவுகளையும் விட்டொழித்து எதிலெடுத்தாலும் சிக்கனம், சிக்கனம், சிக்கனம், என்ற நிலைமைக்கு வரவேண்டும். ஒவ்வொரு காசையும் திரும்பத் திரும்பக் கணக்குப் பார்த்துச் செலவுசெய்ய வேண்டிய காலம் வந்துவிட்டது. இனி வரப்போகிற க்ஷாம காலத்தின் நிழல்தான் இப்பொழுது தோன்றியிருக்கிறதே யொழிய உண்மை உருவம் இன்னும் வரவில்லை ஆதலால் எல்லோரும் எச்சரிக்கையாயிருக்க வேண்டியதவசியம்.

—தமிழ் நேசன்.

உலகில் ஒருவாரத்தில் மட்டும் சினிமாவுக்குச் செல்பவர்களின் தொகை 25 கோடியாம்.



## இஷ்யூக்களைத் தீர்ப்பதற்கான வாய்டிடியூட் சம்மன்கள்.

ஸிவில் கோட் புரோஸிஜர் ஆர்டர் 5. ரூல் 1, 2.
மியாங்மியாவிலுள்ள உவாக்கமா சப் டிவிஷனல் கோர்ட்டு.
சிவில் ரெகுலர் நெ. 92 Of 1929,

எஸ். பி. கே. ஏ. ஏ. எம். கடை ஷெயார் ஏஜண்ட் கண்ணப்ப செட்டியார் மூலம் } வாதி

என். எம். எ. எல். ஏ. ஆர் மாணிக்கம் செட்டியார், (a) அருணுசலன் செட்டியார், ஷெயார் கார்டியன் மீனுக்ஷி ஆச்சியும் முதல் பிரதிவாதி மூலமும் .... .... ... } பிரதிவாதி.

(தற்சமயம் புதுச்சேரியிலிருக்கும். தேவகோட்டை முனிசிப் கோர்ட் எல்கைக்குள் ராமநாதபுரம் ஜில்லா தேவகோட்டையிலிருக்கும் லேவாதேவி தொழில் செய்கிற ந. மெ. அழ. மெ. ஷண்முகம் செட்டியாருக்கு:—

மேற்படி வாதி உம்மிடமிருந்து இரண்டு புரோநோட்டுகளுக்கு நீர் தரவேண்டிய ரூ. 1648—14—9-ம் வரப்பற்ற உம்மீது இக் கோர்ட்டில் வழக்குத் தொடுத்திருக்கிறார். நீர் நேரிலாவது, கிரமமாக அதிகாரம் பெற்ற ஏஜண்ட் மூலமாவது இந்த வழக்கு சம்பந்தமாக எல்லா கேள்விகளுக்கும் பதில் சொல்லக் கூடியவராகவும் கற்பனை பெற்றவருமான கோர்ட் அட்வகேட் அல்லது வக்கீல் மூலமாவது மேற்கண்ட கேள்விகளுக்கு சரியாக பதில் சொல்லக்கூடியவர்களின் துணைகொண்டாவது 1930-ம் வருஷம் செப்டம்பர் ௴ 27 தேதி சனிக்கிழமை முற்பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி உம்முடைய ஆட்சேபணையைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியது. மேற்குறித்த தேதியில் நீர் ஆஜராகத் தவறினல், ஷை இஷ்யூக்கள் நீர் ஆஜராகாமலிருக்கையிலேயே முடிவு செய்யப்படுமென்று அறிவிக்கப்படுகிறது.

நீர் எழுத்து மூலம் ஏதும் ஸ்டேட்மெண்டு கொடுக்க விரும்பினல் வாய்தாவுக்கு 4 நாளைக்குமுன் கொடுக்க வேண்டும்.

1930-ம் வருஷம் ஆகஸ்டு ௴ 30-உ யாகிய இன்று என் கையெழுத்தைக் கடியில் கோர்ட் முத்திரையும் இடப்பட்டிருக்கிறது.

சான்வா.

வாக்கமா சப்டிவிஷனல் ஜட்ஜ்,
130 மியாங்மியா, (பர்மா.)





## வட்டமேஜை மகாநாடு.

### முதன்மந்திரி தலைமை வகிப்பார்.

(மார்னிங் போஸ்டின் கூற்று.)

திரு. மாக்டொனல்டு வட்டமேஜை மகாநாட்டில் தலைமை வகிப்பாரா என்ற கேள்வியின் சந்தேகம் தீர்ந்துவிட்டது. லார்டு ஸாங்கி தலைவராகப் போவதில்லை. இவரைப்பற்றி வந்த வதந்தி பொய்யாகும்.

சில கமிட்டிகளால் மகாநாடு சம்பந்தமான ஏற்பாடுகள் செய்யப்படுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. ஆகவே மாக்டொனல்டு மகாநாடு முற்றிலுமோ அல்லது சில குறிப்பிட்ட நாட்களிலோ பிரசன்னமாயிருக்கலாம்.

லார்டு பீல், ஏர்ல். வின்டர்டன், லார்டு ரீடிங், ஸர் ஹெர்பர்ட்டு வின்டர்டன் ஆகியோர் கன்ஸர்வேட்டிவ் லிபரல் ஆகிய இருகட்சிகளுக்கும் பிரதிநிதிகளாயமைவர்.

### திரு. சமன்லால் மகாநாட்டிற்குப் போவதில்லை.

திவான் சமன்லால் தாம் வட்டமேஜை மகாநாட்டின் ஓர் அங்கத்தினராய்ப் போவதில்லை மென்று மறுத்துவிட்டதாகத் தெரிகிறது.

பிர்திவந்த செய்தியில் ராஜிப்பேச்சுத் தோற்றுவிட்ட படியாலும், மகாநாட்டுப் பிரதிநிதிகளில் பெரும்பாலோர் முதலாளிகளா யிருப்பதாலும், அவர் போவது பயனளிக்காதென்று நினைத்து தம் ஸ்தானத்தைவிட்டு விட்டா ரென்று தெரிகிறது.

## பஞ்சாப் ஹிந்துசபையின் கோரிக்கை.

பஞ்சாப் ஹிந்து சபையின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் செப்17ல் நடந்தது. அதில் ராய்பகதூர் சேவகராம் அக்கிராசனம் வகித்தார். சர்வகட்சி மகா நாட்டில் பஞ்சாப் ஹிந்துக்களுக்குப் போதிய பிரதிநிதித்துவ மளிக்காததை ஆத்திரத்துடன் பலமாகக் கண்டிப்பதாகவும் பஞ்சாப்பிலிருந்து இன்னும் 2 ஹிந்துக்களையேனும் நியமிக்கவேண்டுமென கவர்ன்மெண்டைக் கேட்டுக் கொள்வதாகவும், இவ்வாறு செய்யத் தவறினல் மகாநாட்டிற்கு வருமாறு வந்துள்ள அழைப்பை ஏற்காதிருக்கும்படி சபை, ராஜா நரேந்திர நாதரைக் கேட்டுக் கொள்ளுவதாகவும் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

## வட்டமேஜை மகாநாட்டுக்கு நாடார் பிரதிநிதி

மதுரை நாடார் மகாஜனசங்கக் காரியதரிசி சமீபத்தில் கூடப்போகும் வட்டமேஜை மகாநாட்டுக்கு ஓர் நாடார் பிரதிநிதியும், டில்லி சட்டசபைக்கு ஒரு அங்கத்தினரும், சென்னைச் சட்டசபைக்கு குறைந்தபக்ஷம் இரண்டு உறுப்பினர்களும் தங்கள் ராஜபக்தியையும், சமுதாயத் தொகையும் வரிகொடுக்கு முரிமையையும் நோக்கி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அரசப்பிரதிநிதிக்கும் சென்னைக் கவர்னருக்கும் மனுக்கொடுத்திருக்கின்றார். நாடார் களொழிந்த ஏனைய ஜாதியார் தங்கள் விஷயத்தில் அதிகம் கவலைசெலுத்த மாட்டார்களென்று அவர் மனுவில் குறிப்பிடுகின்றார்.

## பாகநேரி சென்குப்தா பாட்மின்டன் கிளப்.

பாகநேரி 14—9—30

இன்று இவ்வூரில் சில பிரபலஸ்தர்கள் சேர்ந்து பாட்மின்டன் கிளப் ஒன்று நிறுவியுள்ளார்கள். அதற்கு ஸ்ரீமான் ஜெ. எம். சென்குப்தா அவர்களின் பெயர் இடப்பட்டிருக்கின்றது. இன்று மாலை 5 மணிக்கு சில நண்பர்கள் சேர்ந்து அங்கத்தினர்களுக்கு "டீ"பார்ட்டி செய்துவைத்தார்கள்.

ஸ்ரீமான் வி. எம். மாணிக்கம்பிள்ளை அவர்கள் பிரஸிடெண்டாகவும், ஸ்ரீமான் சி. உ. சுப. உடையப்பா அவர்கள் வைஸ் பிரஸிடெண்டாகவும், ஸ்ரீமான் ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டார்களென காரியதரிசி எழுதுகிறார்.

## அமெரிக்காவில் காந்திக்குல்லா.

ந்யூயார்க்கு டைம்ஸ் என்ற அமெரிக்கப் பத்திரிகை காந்திக் குல்லாவைப்பற்றி அடியில் வருமாறு எழுதுகின்றது:—

பம்பாயிலுள்ள திரு எம். வி. மோதி என்பவரிடமிருந்து பெற்ற ஒரு காந்திக் குல்லாவையும் ஒரு நூற்கும் கருவியையும் (தக்ளி) திரு.ஜியார்ஜ் எம். கிரே டைம்ஸ் பத்திரிகைக்குக் கொடுத்தார். காந்திக்குல்லா இப்போது இந்தியாவில் பல இடங்களில்—விசேஷமாக ஷோலாப்பூரில்—தடை செய்யப்பட்டிருக்கின்றது.

காந்திக்குல்லா அணிவது ஒருவன் மகாத்மாஜியின் முழுக்கொள்கையையும் ஆதரிப்பவன் என்றும், விசேஷமாக சாத்வீகத்தைக்கைக்கொண்டவன் என்றும் காட்டுகின்றது. காந்தித் தொப்பி அணிவதால் ஒருவன் உண்மையுடையவனென்றும் நாணயமுடையவனென்றும் தன் தாய் நாட்டின் விடுதலையின் பொருட்டு எவ்விதத் தன்பத்தையும் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கின்றானென்றும், எளியவாழ்க்கை நடத்தப்பழகினவன் என்றும், வகுப்பு பேதத்தை விட்டு நாட்டில் ஒருவனுகி விட்டானென்றும் கொள்ளப்படுகின்றான். பகைவனுக்கு யாதொரு கெடுதியும் விளைக்காது பொறுமையோடு சத்தியாக்கிரகம் செய்ய விரும்புகின்றவன் என்ற காந்திக்குல்லா அணிபவன் கருதப்படுகின்றான். அத்தகையவன் எதிரிகள் எவ்வளவு உதைத்தபோதிலும் ஒருவிரலையேனும் அசைக்காது தன்மேல் விழும் உதைகளைப் பொறுமையுடனேற்றுக் கொள்ளுவான். அன்றேன் சாந்தமுடையவனும் உதவி புரிபவனுகவும் தாராள சிந்தையுடையவனுகவும் லஞ்சத்திக் காளாகாதவனுகவுமிருப்பான். இந்தக் குல்லாவுக் கெதிராக அரசாங்கம் போர் நடத்தி அதனை அணிபவரைத் தண்டிக்கிறது. ஒரு குல்லாவுக்கு விலை 10 செண்டு. அது இலேசாக சலவை செய்யப்படுகின்றது. இன்று பம்பாயிலுள்ள மொத்த ஜனத்தொகை 600,000ல் 400,000க்கு மேல் காந்தித் தொப்பியணிந்திருக்கிறார்கள்.

தக்ளி என்பது நூல் நூற்பதற்காக உபயோகிக்கப்படுமோர் சிறிய கருவியாம். இதனுல் எளிதில் வேலை செய்யக்கூடும். இந்தியரில் பெரும் பாலோர் இதனைக் கையாடுகின்றார்கள்.

இந்திய தேசிய மகாசபை ஆங்கிலநாட்டுத்துணிகளை பஹிஷ்கரிக்கத் தொடங்கியிருக்கின்றது அதோடு அவசியமான துணிக்காக ஒவ்வொரு காங்கிரஸ் உறுப்பினரும் ஒவ்வொரு நாளும் 125 கஜமாவது நூற்க வேண்டுமென்று ஏற்பாடு செய்திருக்கின்றது. பம்பாயில் 600,000 பேர் நூற்கின்றார்கள்.

## திரு. வெல்லாக்கிற்குப் பதில்.

### மகாத்மாவின்கடிதம்.

"அரசாங்கம், இந்தியாவின் சுயேச்சைக்கனுகூலமான விஷயத்தை யோசிப்பதற்காகவே மகாநாடு கூட்டப்படுகின்ற தென்ற வாக்குறுதியை யளித்தமானுல்தாங்கள்சமாசப்பேச்சில் வட்டமேஜை மகாநாட்டில் முடிவு செய்யப்படவேண்டிய விஷயத்தை ஓர் நிபந்தனையாகக் கேட்கவேண்டாம்" என்று திரு வெல்லாக் என்ற ஒரு பாராளுமன்ற அங்கத்தினர் மகாத்மா காந்திக்கு எழுதியிருந்தார்.

அதற்கு மகாத்மா காந்தி ஓர் சிறையில் அடைப்பட்டுக் கொண்டிருக்கும்போது ஒப்பந்தம்புரியமுற்படுவது தகுதியுடையதல்லவென்றும், தான் ஒருசிறுகருணத்தையாவது சமாதானமேற்படுத்தும் விஷயத்தில் தான் இழந்ததில்லை யென்பதை நம்பலாமென்றும், தான் இன்னும் இவ்வளவு பலாத்காரம் பொய், புரட்டு இவற்றிற்கிடையில் சமாதானத்திற்கான எவ்வித அடையாளத்தையும் கண்டு கொள்ளவில்லை யென்றும் பதிலிறுத்தார். வெல்லாக்கிற்கு என்ன பதில் சொல்ல வேண்டுமென்று தெரியவில்லை.

## இந்தியசர்க்கா. ஆபீஸ் மாற்றம்.

இந்திய சர்க்கார் ஆபீஸ் ஸிம்லாவில் அக்டோபர்25உ மூடப்பட்டுவிடும்; 27தேதி புதிய டில்லியில் ஆரம்பமாகும்.

## முன்ஷிகஞ்சில் தந்திக்கம்பிகள் வெட்டப்பட்டனர்

கல்கத்தாவுக்கு சமீபமுள்ள முன்ஷிகஞ்சில் தந்திக்கம்பிகள் வெட்டப்பட்டிருக்கின்றன சென்ற 4 தினங்களாக அந்த சப்டிவிஷன் முழுவதும் தந்திப்போக்கு வரத்து நிறுத்தப்பட்டிருக்கிறது. 3 மாதகளுக்கு முன்பு தந்திக்கம்பிகள் பன்முறைஅறுக்கப்பட்டன.

## யாதவர் முயற்சி.

சென்னை ஸ்ரீயதகுல மகாசங்க தமது ஜாதியார் இப்பொழுது வழங்கி வருகிற கோனர், இடையர், கோபர், கோபி அல்லது கௌடர் என்ற ஜாதிப்பெயருக்குப் பதிலாக யாதவர் என்றபெயரை அரசாங்க தஸ்தாவேஜுகளில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று சர்க்காரிடம் கேட்டிருக்கின்றது. இதனைப்பற்றிய மறுப்பாவது கருத்தாவது தெரிவிக்க விரும்புவோருடைய விண்ணப்பம் 1930டிஸம்பர் 1 தேதிக்குள் வந்தால் யோசிக்கப்படும்.

கவர்மேண்டு காரியதரிசி



## கராச்சியில் அந்நிய ஆடை பஹிஷ்காரம்.

### சில ஏற்பாடுகள்.

கராச்சி அன்னிய ஆடை பஹிஷ்காரக் கமிட்டிக்கும் கராச்சி இந்திய ஜவுளி வியாபாரிகள் சங்கத்துக்கும், இந்திய கமிஷன் ஏஜண்டுகள் சங்கத்துக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் பயனுக இந்திய சீமை ஜவுளி வியாபாரிகள் செப்டம்பர் 18-ந் தேதியிலிருந்து 24-ந் தேதி வரையில் சீமை ஜவுளிகளை வெளியிடங்களுக்கு அனுப்பலாம். மீண்டும் அக்டோபர் 9 முதல் 14-ந் தேதி வரை அனுப்பலாம். என்று ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனுல் உள்ளூரில் சீமை ஜவுளி வியாபாரம் நடப்பது கூடாது. இதன் பிறகு சீமைஜவுளி பஹிஷ்காரக் கமிட்டியார் நிலைமைக்கேற்றவாறு புதிதாகச் சில ஏற்பாடுகளைச் செய்வார்கள்.

## அபராதத்திற்கு மோட்டார் ஜப்தி.

சமீபத்தில் சர்க்காருக்கு விரோதமாகப் பிரசங்கம் செய்ததற்காக தண்டிக்கப்பட்டு 500 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்ட மோதிலாலின் மாப்பிள்ளை திரு ஆர். எஸ். பண்டிட், அபராதத் தொகை கட்டாததால், அவருடைய மோட்டார்காரை போலீசார் ஜப்தி செய்து எடுத்துக்கொண்டார்கள்.

## பஞ்சாப் சட்டசபை நாவிதர் அங்கத்தினரானுர்.

சமீபத்தில் நடந்தபஞ்சாப் சட்ட சபைத் தேர்தலில் ராம்ஜிதாஸ் என்ற ஓர் நாவிதர் வெற்றியடைந்திருக்கின்றார்.

## இந்தியாவில் ரோடு அமைப்பு.

ஆங்கில ஆட்சியால் ஏற்பட்டிருக்கும் முக்கிய நன்மைகளில் ஒன்று ரோடுகள் பல அமைந்திருப்பதாமென்று பலர் கூறுவதை நாம்கேட்கின்றோம். ரோடமைப்பைப் பற்றிச் சிறிது கவனித்துப் பார்த்தால் இந் நாட்டில் அது மிக பரிதாபகரமான நிலைமையிலிருக்கின்றதென்பது புலப்படும். 1094300 சதுரமைல் அளவுள்ளதும் 2500 லட்சம் ஜனத்தொகையுடையதுமாகிய இந்தியாவில் 60000 மைல் மெட்டல்போட்ட ரோடும் 140,000 மைல் மெட்டல் போடாத ரோடுமே இருக்கின்றன. ஆனுல் சுமார் 60 லட்சத்திற்குக் கொஞ்ச மதிகமான ஜனத்தொகையைக் கொண்டதாகிய ஸ்வீடனில் 80745 மைல் மோட்டார்போகத்தகுந்த ரோடுகள் போடப்பட்டிருக்கின்றன. 1914ல் ஏற்கனவே இருந்த 5100 மைல் ரோடுகளோடு 50000 மைல் ரோடே சேர்க்கப்பட்டன. இது 9 கவர்னர்களுடைய மாகாணங்களில் அவ்வருஷத்தில் அமைந்தது என்று எண்ணும்போது ரோடமைப்பு மிகப் பிற்போக்கே என்று கூறுமலிருக்கமுடியவில்லை. லீடர் பத்திரிகையின் ஓர் நிருபர் குறிப்பிடுவதுபோல ரோடுகள் பல அமைவது செல்வச் செழிப்பையும் உயர்ந்த பயிர்ச்சியையும் காட்டுமென்பது எடுத்துக் காட்டற் குரித்தாகும். ஸ்தல ஸ்தாபனங்களால் வழிநடைப் பாதைகள் காட்டுவதற்கு வெண்ட்ரல் கமிட்டியால் சமீபத்தில் 72 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கின்றதென்பதை நினைப்பூட்ட விரும்புகின்றோம். நல்ல ரோடுகள் நாட்டில் இல்லாமலிருப்பது கிராமாந்தரத்து ஜனங்களை பட்டணங்களோடு கலக்கவிடாமலும் அங்கு நடக்கும் இயக்கங்களோடு ஒன்றிக்கலக்காமலும் தடைசெய்து விடுகின்றதென்பது கவனிக்கத்தகுந்ததாகும். நல்ல போக்குவரவுக்கான சாதனங்கள் ஏற்படுவது ஓர் தேசிய செல்வம். நாம் ஒவ்வொரு ஸ்தலஸ்தாபனங்களும், மாகாண சர்க்காரின் உதவி பெற்று ரோடுகள் பல அமைக்க முற்படவேண்டுமென்று கூறிக்கொள்கிறோம்.

—ஹிந்து.

## மருத்துவர் வேண்டுகோள்.

செப் 16 தேதி ஈரோடு மருத்துவர் கூட்டமொன்று திரு. மௌலுதீன் பாட்சாவின் தலைமையில் காந்தமூர்த்தப் பண்டிதர் மண்டபத்தில்கூடி சென்னை திரு. எஸ். எம். ஆனந்தம் அவர்களை சென்னைச் சட்டசபையில் ஓர் அங்கத்தினராக நியமிக்கும் படிக்கேட்டுக் கொள்வதாக ஓர் தீர்மானம் நிறைவேற்றிற்று.

25 ஆகஸ்டு 1930 யில் வெளி வந்த சென்னை கஜட்டில் விருது நகர் முனிசிப்பாலிட்டியின் நிர்வாக அறிக்கையைப்பற்றி இவ்வாறு எழுதப்பட்டிருக்கிறது:—

போக்கு வரவு.

இம் முனிசிப்பாலிட்டியின் நிர்வாகத்திலிருக்கும் 22½ மைல் கிளைரோட்டையும் 1¾ மைல் நீளமுள்ள பெரிய ரோட்டையும் சீர்படுத்துவதற்காக உபயோகப்படுத்திவந்த தொகை 17319 ரூபாயிலிருந்து 979 ஆகக் குறைந்து விட்டது. இச்செலவு டோல் வருமானத்தின் ஆறுபெர்ஸெண்டேயாகும். இவ்விதக் குறைவான செலவிற்குக் காரணம் கௌன்ஸிலில் ஏற்பட்ட பிளவை முன்னிட்டு கௌன்ஸிலை ஏப்ரல் 8-தேதி முதல் கலைத்து விட்டு செடுகோன் கூடாமலிருந்ததின் எதுவால் ரோட்டில் கவனம் செலுத்தவில்லை. ரோட்டுகள் இப்போது மிகக்கேவலமாயிருக்கின்றன. அரசாங்கம், இப்போது முனிசிப்பாலிட்டியைப்பார்த்து வரும் ஸ்பெஷல் ஆபீசர் இக்குறைகளை நீக்குவா ரென்று நம்புகிறது. முனிசிபல் லைட்டுகள் 468 லிருந்து 448 ஆகக் குறைந்து விட்டன. என்றாலும் விளக்கேற்றும் செலவு 12497 லிருந்து 12566 ஆகக்கூடியிருக்கின்றது. பட்டணம் முழுதும் எலக்டிரிக் விளக்குப் போடும் திட்டம் யோசனையிலிருக்கின்றது. சத்திரம் கட்டும் விஷயம் சீக்கிரத்தில் நடப்பில் வரும்.

கல்வி.

முதல்தரக்கல்வி இலவசமாகவும் கட்டாயமாகவும் கொடுக்கப்பட்டு வருகிறது. பள்ளிக்கூடம் போகத் தகுந்த எல்லா ஆண் குழந்தைகளும் படிக்கின்றார்கள். மாணவிகளின் தொகை நூற்றுக்கு 49லிருந்து 51 ஆகியிருக்கிறது. இந் நகர சபையாரால் 6 முதல்தர பள்ளிக்கூடங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. இவற்றில் 5 ஆண்களுக்கும், ஒன்று பெண்களுக்குமாம். இவ்வாறில் ஒன்று மகமதியர்கட்காகவும் மற்றொன்று ஆதித்திராவிடர்கட்காகவும் நடத்தப்பட்டிருக்கின்றன. ஆண் பள்ளிக்கூடத்தின் மாணவர் தொகை 628 லிருந்து 589 ஆகக் குறைந்துவிட்டது. பெண் குழந்தைகளின் தொகை 90 லிருந்து 92 ஆக மாறிற்று. ஆஜர் ஆண் பள்ளிக்கூடத்தில் கூடிற்று; பெண் பள்ளிக்கூடத்தில் குறைந்தது. ¾ பள்ளிக்கூடங்கள் வாடகைக் கட்டிடங்களில் நடைபெறுகின்றன. இவற்றில் சிலவற்றிற்கு கட்டிடம் கட்டும் விஷயம் யோசனையிலிருக்கின்றது. இந் நகர சபை செகண்டரி பாடசாலைகளை நடத்தவில்லை. தனிப்பட்ட ஸ்தாபனத்தில் செகண்டரி ஸ்கூல்படிப்பு நடக்கின்றது.

பொதுச் சுகாதாரம்.

இச்சபை பெண்களுக்கும் குழந்தைகளுக்குமாக ஓர் ஆஸ்பத்திரியும் ஒரு சித்த வைத்தியசாலையும் வைத்திருக்கின்றது. இவ்வருஷம் ஆஸ்பத்திரியில் 8091 பேர்கள் சிகிச்சை பெற்றிருக்கின்றார்கள். இவரில் ஒருவரேனும் முனிசிபல் எல்லைக்கு வெளியிலிருந்து வந்தவர்களல்ல. சித்த வைத்திய சாலை 16914 பேர்களை சிகிச்சித்திருக்கின்றது. அவரில் 886 பேர் முனிசிபல் எல்லைக்கு வெளியே இருந்து வந்தவர்களாம்.

## விருதுநகர் முனிசிப்பாலிட்டி
## நிர்வாக அறிக்கை.

ஜனனவிகிதம் 1000த்துக்கு 45 லிருந்து 39 க்குக் குறைந்திருக்கின்றது. கவர்மெண்டு ஆஸ்பத்திரியில் வேலைபார்க்கும் ஒரே மருத்துவச்சி 197 ஜனனத்தை பார்த்திருக்கின்றாள். இது பிறப்பில் நூற்றுக்கு 23 விகிதமாம். சிசுமரண விகிதம் ஒவ்வொரு ஆயிரத்திலும் 184 ஆக இருந்தது 211 ஆகக் கூடிவிட்டது. சிசுசம்ரக்ஷணைக்கான இடங்களும் சிசு மரணமதிகமாய் ஏற்படாதிருப்பதற்கான வழிகளையும் சீக்கிரத்தில் தேடிக்கொள்ளவேண்டும்.

இறப்பு விகிதம் ஆயிரத்தில் 34 லிருந்து 41 ஆக கூடி இருக்கிறது. இவ்வருஷத்தில் இரண்டுதரம் காலரா காணப்பட்டது. அதன் பயனாக 110 பேர் இறந்து போனார்கள். நகரில் வேறு தொத்துவியாதிகள் உண்டாகவில்லை.

வீடுகளின் தொகை 7168 ஆகயிருந்தது 7300 ஆயிற்று. என்றாலும்கக்கூஸ்கள் 1250 லிருந்து 1230 ஆகிவிட்டது. இவைகளியாவும் முனிசிபல் உத்தியோகஸ்தர்களால் பாதுகாக்கப்படுகின்றன. கவுன்ஸில் அதிகீன மாகக்கக்கூஸ்களின்றிவீடுகள்கட்ட அனுமதித்திருக்கின்றது. மொத்தம் நூற்றுக்கு 17 விகிதமுள்ள வீடுகளே கக்கூஸ்வைத்திருக்கின்றன. ஆகையினால் சோட்டிகள் கியமிக்கப்பட வேண்டியதிருக்கின்றது. இது 764ரூ லாபம்தந்திருக்கின்றது.

ஒரு நல்ல பாதுகாப்புள்ள ஜல சப்ளைத் திட்டம் சானிட்டரி என்ஜினியரால் தயாரிக்கப் பட்டுவருகிறது. ஒருபெரியவடிகால் திட்டம் இன்னும் தொடங்கப் பெறவில்லை.

வருவாய் மார்க்கம்.

கடந்த மூன்று வருடங்கட்குள்ள வருவாயும் செலவுகளும் வருமாறு:—

1929—30 வருமானம்.

| | | |
|---|---|---|
| சந்தைகள் | ரூ | 2497 |
| ஸ்லாட்டர் ஹௌஸ் | | 638 |
| மரங்கள் நடுகை | | 24 |

செலவு.

| | |
|---|---|
| சந்தைகள் | 2078 |
| ஸ்லாட்டர் ஹௌஸ் | 6 |
| மர நடுகை | 186 |

இச் சபைக்கு 4 சந்தைகளும் ஒரு ஆடு வெட்டுமிடமும் இருக்கின்றன. நிலவரமான ஓர் சந்தை யமைப்பு செய்வதாய் யோசனையிலிருந்து வருகிறது. இவ் விஷயமாய் சீக்கிரம் ஒரு முடிவு வரவேண்டும்:

வரவு செலவு.

சென்ற வருஷம் நூற்றுக்கு 99-ம் 100-மாகப் பிரிவு செய்யப்பட்டிருந்த வரிகளில் இவ் வருஷம் 94-ம் 79-மே பிரிவு செய்யப்பட்டன. இவ் வருஷக் கடைசியில் பாக்கி ரூ 14354. இதில் 3366- வருஷம் முடிந்ததும் பிரிவு செய்யப்பட்டு விட்டது. ஆண்டிறுதியில் 1009 ரூபாய் வருகின்றபில் கொடுபடாமலிருந்தது.

போது.

இவ் வருஷம் 3 தேர்தல்கள்தான் நடைபெற்றன. அவைகள் எதிர்ப்பின்றி வெற்றி பெற்றது. மொத்தம் நடந்த கூட்டம் 17, அவற்றில் கோரமில்லமையால் 5 ஒத்திவைக்கப்பட்டன; 3 கூட்டத்தில் சமாதானமின்மை நோக்கித் தலைவரால்கலைக்கப்பட்டன. கூட்டங்களில் ஆஜர் 64 லிருந்து 53 ஆக குறைந்தது. கவுன்ஸிலின் பிளவு காரணமாக 3 ஸ்டாண்டிங் கமிட்டிகளும் ஒரு வேலையும் செய்ய வில்லை.

முனிசிப்பாலிட்டியின் கெட்ட நடைமுறைகளாலும் கவுன்ஸிலர்களோடு தலைவருக்கு ஒத்துழைக்க முடியாத காரணத்தாலும் பொது ஜனங்களின் பழிச்சொல்லுக்கிடமாகி 6 மாதம் கூடாமலிருந்தது.

ஹில்டன் ப்ரௌண்
சிக்ரட்டரி

---

சிவகங்கை
ஜமீன் வார்சுபாத்தியம்

ஸ்ரீமான் முத்து விஜயரகுநாத துரைசிங்கம் என்ற கௌரிவல்லபத் தேவரின் பாக்கியுள்ள ஓரேபிள்ளையான ஸ்ரீமான் மதுரை என்ற வேங்கடசாமித் தேவர் தம்மை சிவகங்கை ஜமீன்தாராக அறிவிக்கவேண்டுமென்றும் ஜமீனுக்குச் சொந்தமான சொத்துக்களையும் வருமானத்தையும் தம்மிடம் ஒப்புவிக்க உத்தரவிடவேண்டுமென்று சிவகங்கை ஸப் கோர்ட்டில் பாப்பர் வியாஜ்யம் போட்டிருக்கிறார்.

---

அண்ணமலை சர்வகலாசாலையில்
புதிய புரொபசர்.

(செட்டிநாடு 18—9—30)

மதராஸ் சர்வகலாசாலை தத்துவ சாஸ்திர புரொபசர் ஸ்ரீமான் டி. கே. துரைசாமி ஐயர் நாளது 15—9—30 யன்று அண்ணமலை சர்வகலாசாலையில் தத்துவ சாஸ்திர புரொபசர் வேலையை ஏற்றுக்கொண்டார்.

---

ஸிம்லா சித்திரக்காட்சி

இவ்வருஷம் ஸிம்லாவில் நடைபெற்ற சித்திரக்காட்சியில் பம்பாயை சேர்ந்தச் மிஸின் பிளெமிங், ஸ்திரீகள் எழுதிய அழகிய படத்திற்காக பஞ்சாப் கவர்னர் கொடுத்த பரிசைப் பெற்றார். லேடி பெர்வெட் கிம்மதியான வாழ்க்கையைப்பற்றி எழுதிய படத்திற்காக ஒரு பரிசுபெற்றார்.

---

. 64,000,000,000 பேர்களில் இருவர்கை ரேகைதான் ஒத்திருக்குமாம்.







# பர்மா
# நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள்
# சங்கத்தின்
# 7-வது ஆண்டு நிறைவு விழா.

ஆவணி மாதம் 29உ ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தின் 7-வது ஆண்டு நிறைவுவிழா, சங்கக் காரியாலயத்தில் தலைவர் திருவாளர் ராம. அரு. அரு. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் கூடிற்று. அதுகாலை கூட்டத்திற்கு உள்ளூர் வெளியூர் மெம்பர்களில் பலர் விஜயம் செய்திருந்தார்கள். கூட்ட ஆரம்பத்தில் கடவுள் வணக்கம் கம்பை தனவைசிய கல்வி நிலைய மாணவர்களால் கூறப்பெற்றது. அதன் பின்னர், ஏழாம் ஆண்டு அறிக்கையை நிறைவேற்றிக்கொள்ளும்படி பிரரேபித்து கீழ்கண்ட முன்னுரையை திருவாளர் ராம அரு அரு. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் நிகழ்த்தினர். அதன் சாரம் வருமாறு:—

சங்கம் சமூகவர்க்கு செய்துவரும் அரும் பணியை பர்மா நகரத்தார்களனைவரும் நன்கு அறிந்துள்ளார்கள். ஆதலால், இங்கு அதனை விரித்துச் சொல்வது மிகையெனக் கருதி இதர பொருள் குறித்து சில மொழி பகர்வேன்,

பர்மா பெருமைக்குத் தாயகமாயிருப்பது அதன் விவசாயமும் சிறப்பாக நெல் வளமும் ஆகும். அதன் மக்களில் நூற்றுக்கு எழுபதின்மர் விவசாயத்தை அண்டியவர்களாயிருக்கிறார்கள். சென்ற சிலவருடங்களாக விளை பொருள்களின் விலைகள் மிக இறங்கிவிட்டன. முன் கிடைத்ததைவிட குறைவான வருமானம் பெறும் விவசாயி தன்னுடைய தேவைகளை அதற்குத் தகுந்தவாறு குறைத்துக்கொள்கிறான். ஆதலால் செய் பொருள்களின் கிராக்கி குறைகிறது. அவைகளின் விலையும் பாதிக்கப்படுகிறது. உலகமெங்கும் மந்தமாயிருக்கிற இவ்வியாபார நிலை இந்தியாவில் பிறப்புரிமைக்கு விளைந்து நிற்கும் அரசியல் பெருங் கிளர்ச்சியால் சீர்கேடுற்றிருப்பதில் ஆச்சரியமில்லை. நெல் விலை இறக்கத்தால் நிலங்களின் விலைகளும் இறங்கி விட்டன. அவைகளால் விவசாயிகளின் சொத்து மதிப்பும் குறைந்துவிட்டது. பர்மாவில் அரிசி நெல் விலை இறக்கத்திற்கு பற்பல காரணங்கள் கூறப்பெறுகின்றன. அவைகளை விசாரித்து பரிகாரங்களைக் கூறுவதற்கு பர்மா சர்க்காரால், டி. கூப்பரின் தலைமையில் நியமிக்கப்பெற்ற கமிட்டியின் யாதாஸ்து சீக்கிரம் வெளிவரக்கூடும். இவ்வாண்டு ஏப்ரல் மாதத்தில் அரிசி ஏற்றுமதியின் தீர்வையை சர்க்காரில் குறைத்துள்ளது. அவ்வியாபாரத்திற்கு கொஞ்சம் நன்மை பயக்கக்கூடியதாய் உள்ளது.

பேங்கிங் விசாரணைக் கமிட்டி.

இந்தியாவின் பாங்கிங் தொழிலை விசாரித்து சிறப்பாக சுதேச பாங்கிங் தொழிலை விருத்திக்குக் கொண்டுவருவதற்கான யோசனைகளைக் கூறும்படி மத்தியக்கமிட்டி ஒன்றும், மாகாணங்கள் தோறும் மாகாணக்கமிட்டி ஒன்றும், சர்க்காரால் நியமிக்கப்பெற்றது தாங்களறிந்ததே. சாமர்த்தியம் வாய்ந்த கிராந்தம் தலைமையில் நியமிக்கப்பெற்ற பர்மா மாகாண வங்கி விசாரணைக் கமிட்டியார் தங்கள் யாதாஸ்தை இம்மாதம் முதல் வாரத்தில் வெளியிட்டுள்ளார்கள். 368 பக்கங்கள் கொண்ட அப்பெரிய நூல் பாங்கிங் சம்பந்தப்பட்ட பல அரிய பிரச்னைகளை வெளியிட்டிருக்கிறது இடையிடையே செட்டிமார்களின் தொழில் முறையைப் பற்றி விஸ்தரித்திருப்பதுடன் "பர்மாவில் செட்டிமார்கள்" என்ற தலைப்புடன் அறுபது பக்கங்கள் எழுதியுள்ளார்கள். தவ்வத்தியாயத்தில் கூறப்பெற்றுள்ள நம் பழக்க வழக்கங்களும், தொழில் முறையும் சில இடங்களைத் தவிர மற்றவைகளெல்லாம் பெரும்பாலும் உண்மையாகவே விளக்கப்பட்டிருக்கிறது. "தெற்கு வட்டகைச் செட்டியார்களின் வெளிக்கடைகள்" என்ற தலையங்கத்தில் தெற்கு வட்டகைச் செட்டியார்களின் விவசாயத்திற்கே பணங்கொடுப்பவர்களென்றும் அவர்களெல்லாம் சிறு கடைகளென்றும், அவர்களிற் சிலரே சங்கத்தில் சேர்ந்துள்ளாரென்றும் தவறாக குறித்திருப்பது அவர்கள் சில விஷயங்களில் தீர விசாரிக்கவில்லை யென்று சொல்லவேண்டியதிருக்கிறது. தெற்கு வட்டகைச் செட்டியார்களில் பல பெரும் கடைகளிருக்கின்றன. அக்கடைகளெல்லாம் நமது சங்கத்தில் அங்கத்தினர்களே! சமீபத்தில் சில ஆசை கொண்டு செட்டியார்களிடம் கடன் வாங்கியவர்கள் பணம் கொடுக்கத்தவறிய காலத்தில் தங்களிடம் மார்க்கிசாக உள்ள அர்லிலங்களை எடுத்துக்கொள்ள முயற்சிக்கின்றார்கள், என்று சில விஷமிகள் சொல்லிவந்ததை அப்பொழுதைக் கப்பொழுது பத்திரிகைகளில் தக்க ஆதாரங்களுடன் கண்டித்து வந்திருக்கின்றோம். நமது கூற்றை அக்கமிட்டியின் பர்மிய அங்கத்தினர் நால்வரும் பூரணமாய் ஐனன்சம் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் அதன் தலைவர் கிராந்தமும், டாசனும் ஒப்புக்கொண்டு தகுந்த முகாந்திரத்துடன் ஒரு குறிப்பு எழுதி இருக்கிறார்கள். பர்மாவில் விவசாயம், கைத்தொழில், வியாபாரம் இவைகளின் பண சம்பந்தமான முக்கிய பிரச்னை வட்டி விகிதத்தைக் குறைப்பதேயாகும் என்று கடைசியாக இவர்கள் முடிவுகட்டி இருக்கின்றனர். பர்மாவில் இருந்துவந்த வட்டி விகிதங்களை செட்டிமார்கள் குறைத்துள்ளார்கள் என்று நாம் சொல்லிக்கொள்வதையுமா, நாம் எங்கெங்கு கடைகள் திறந்தோமோ அங்கெல்லாம் வட்டி விகிதம் குறைந்ததென்றும், தற்சமயம் பர்மாவிலிருக்கும் வட்டி விகிதம் அதிகமானாலும் செட்டிமார்களில்லாவிட்டால் ஏற்படக்கூடிய வட்டி விகிதத்தைவிட தற்சமயம் உள்ள வட்டி விகிதம் குறைவானதே யென்றும், செட்டிமார்கள் வாங்குவதைவிட பர்மியர்கள் அதிக வட்டி விகிதம்வாங்குகிறார்களென்று லோயர் பர்மாவைவிட செட்டிமார்களதிகமில்லாத அப்பர் பர்மாவில் வட்டி விகிதம் அதிகமாயிருக்கிற தென்றும் இவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். என்றாலும் தற்சமயம் இருந்துவரும் அதிக வட்டிக்குக் காரணங்கள் கூறிவிட்டு இவ்விகிதத்தைக் குறைப்பதற்கு பல வழிகளும் குறிப்பிட்டபின் அதற்கு முக்கியமாகச் செய்யவேண்டியது பாங்க் ஆப் பர்மா என்ற பெயருடன் ஒரு பாங்கு திறவப்பெற வேண்டுமென்றும் காலக்கிரமத்தில் அதற்கு ஜில்லாக்கள் தோறும் கிளைகள் திறக்கவேண்டுமென்றும் அப்பாங்கிலிருந்து நோட்டுகள் வெளியிட வேண்டுமென்றும் சிபார்சு செய்துள்ளார்கள். பர்மா சர்க்கார் பிரிவினை மந்திரத்தை வென்றும் உச்சரித்துக்கொண்டிருப்பதுபோல இக்கமிட்டி அங்கத்தினர்கட்கும் அதின்மூர்ச்சியமாய் கவனம் இருந்துவருவதை பலபக்கங்களில் காண்பித்துள்ளார்கள். பாங்கிங் விசாரணைக்கமிட்டியை இந்திய சர்க்கார் நியமனம் செய்ததற்கு ஓர் முக்கிய காரணம் ரிசர்வ் பாங்கு பிரச்னையை ஓர் முடிவுக்கு கொண்டுவரவேண்டுமென்பது தான். நோட்டுகள் வெளியிடுவது சர்க்கார் கையிலும், அதை செலாவணி செய்து தேசத்தின் நாணயத்தை விருத்திசெய்வது இம்பீரியல் பாங்கிலுமாக இரண்டு பேர் கையிலிருப்பதில் பல சிரமங்கள் நேருவதை யுத்தேசித்து இவ்விரண்டு வேலைகளும் ரிசர்வ் பேங்கு கையில் ஒப்படைப்பது சாலச்சிறந்ததாகுமென்று சாற்றப்பெறுகிறது. பர்மா பிரிக்கப்பட்டு பர்மாவிற்கென இக்கமிட்டியார் சிபார்சு செய்துள்ள பிரகாரம் தனி ரிசர்வ் பாங் திறவப்பெற்று அதிலிருந்து வெளியிடும் நோட்டுகளை தற்சமயம் அரசபிரான் தலையுள்ள நோட்டுகளை ஜனங்கள் ஏற்றுக்கொள்வது போல அவ்வளவு சுலபமாக ஏற்றுக்கொள்வார்களா என்பது யோசிக்க வேண்டிய விஷயமாகும். மற்றும் பிரிக்கப்பட்ட பர்மாவில் ரிசர்வ் பாங்கு ஏற்படுத்துவது என்றால் பல பிரச்னைகள் யோசிக்கப்பெற வேண்டியதாகவிருக்கும்.

ஆனால் இங்கு நம்முடைய வட்டி விகிதம் உண்மையில் அதிகமாயிருக்கிறதா என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டியவர்களாக யிருக்கிறோம். இந்தியாவைவிட பர்மாவில் வட்டி விகிதம் அதிகமாய் இருப்பதற்கு சர்க்காரும் ஒரு பங்கு பொறுப்பாளிகளாவார்கள். இந்தியாவைவிட பர்மாவில் இரண்டு மூன்று வட்டி அதிகமாக சர்க்காரின் நிர்வாகத்திற்குட்பட்ட இம்பீரியல் பாங்குக்காரர்களால் வாங்கப்பெறுகிறது. செட்டிமார்களின் நடப்பு வட்டி எட்டணா. அதாவது 6 வட்டியாக இருக்கும். இம் மாதத்தில் கல்கத்தா வட்டி ஐந்தாக விருந்தும் இம்பீரியல் பாங்கியில் 8 வட்டி வாங்கப்பெறுகிறது. மற்றும் ஸ்டாம்புத் தீர்வை, ரிஜிஸ்திரேஷன் பீஸ், வருமான வரி முதலிய விஷயங்களில் பல சௌகரியங்கள் செய்து கொடுக்கப்பெற்றிருக்கும் நாட்டுப்புறங்களில் உள்ள கோவாபரேடிவ் சொஸைட்டிகள் 15 வட்டிக்குக் கடன் கொடுக்கிறார்கள். 15 வட்டி வாங்கியும் நூற்றுக்கணக்கான கூட்டுறவுச் சங்கங்கள் பர்மாவில் கெட்டதிலிருந்து விவசாய லேவாதேவியில் பல கஷ்டங்களும் ஆபத்துகளும் இருப்பது தெளிவாக விளங்குகிறது. ஏறக்குறைய இந்த 15 வட்டிக்கே பெரும்பாலான தொகைகள் விவசாயத்திற்கு செட்டிமார்களால் கடன் கொடுக்கப்பெறுகிறது. இத்தொழிலுக்குரிய பல ஆபத்துகளும் குறைந்து, கொடுத்த பணத்தை வசூல் செய்வதற்குரிய சௌகரியங்கள் ஏற்படாலொழிய தற்சமயம் வட்டியைக் குறைப்பானால் லேவாதேவியில் ஒருவித லாபமுமில்லாமல் அத்தொழிலை நிறுத்திவிடவேண்டியதாகவும். பர்மாவில் உள்ள இதர தொழில்களைவிட லேவாதேவியில் லாபம் மிகக் குறைவாக உள்ளது. அதிலும் எல்லாவியாபாரங்களும் பாதிக்கப்பட்டிருக்கும் தற்காலத்தில் செட்டியார்களின் லாபமும் இயற்கையாகவே குறைந்திருக்கிறது. என்றாலும் இவ்விஷயத்தை செட்டிமார்கள் கவனித்து தங்கள் தங்கள் தொழிலுக்குத் தகுந்தவிதம் வட்டி விகிதத்தில் எவ்வளவு சகாயம் செய்யலாமோ அதற்கு வேண்டிய வழிகளையெல்லாம் யோசிக்க வேண்டுகிறேன்.

பூகம்பமும் கலகமும்.

பர்மாவில் இவ்வருடத்தில் பூமி அதிர்ச்சி யேற்பட்டு பலருக்கு உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் யேற்பட்டதும், எந்த தில்லாதவாறு கப்பற் கம்பெனிகளின் சாமர்த்தியமின்மையால் ஏற்பட்ட ஓர் சிறு கலகம் பல விஷமிகளின் பிரசாரத்தால் பெருங் கலகமாக மாறி ஆயிரக்கணக்கான மக்களுக்குக் காயங்களும் நூற்றுக்கணக்கான மக்கள் இறக்கவும் சேர்ந்ததும் மிகவும் விசனிக்கத்தக்கது. பர்மாவின் பல பாகங்களிலும் தங்கள் தங்கள் சக்திக்கேற்றவாறு பக்கோ (Pegu) பூகம்ப நிவாரண நிதிக்கு கம்மவர்கள் பொருளுதவி செய்திருப்பதைப் போற்றுகிறேன். கலக சமயத்தில் இரங்கூன் போலீசார் நடந்ததையைப் பொதுஜனங்கள் கண்டிப்பதற்கு மிகவும் இடம் கொடுத்துவிட்டார்கள். ஆனால், நாட்டுப்புறங்களில் பர்மிய இந்தியத் தலைவர்களின் உயர்குணங்களாலும் போலீசார் தங்கள் கடமையைச் செய்வதில் உறுதியாயிருந்தமையாலும் எவ்வித கலகமும் நிகழாதவாறு தடுக்கப்பெற்றது. அதுசமயம் பர்மியர்களில் பலர் இந்தியர்களைப் போக்கிரிகளின் இம்சைகளிலிருந்து காப்பாற்றியதும் பொதுஜனத் தலைவர்களும் பெரியவர்களும் கலகத்திற்கு முற்றும் விரோதமாய் இருந்ததும் இந்தியருக்கும் பர்மியருக்கும் உள்ள தேசபான்மையையும் விரோதமின்மையையும் காட்டியது. பக்கோவில் பூகம்பத்தால் செட்டிமார்களும் பொதுஜனங்களும் பலவித கஷ்ட நஷ்டங்கள் அடைந்திருக்கின்றனர். அவ்வூர் வாசிகள் வருமான வரியை சிலவருடங்களுக்கு தள்ளிக் கொடுக்கவேண்டு மென்று விரும்புகின்றனர். இது நியாயமான கோரிக்கையேயாகும். நமது பர்மிய கவர்னர் மேன்மைதங்கிய சர் ஜோசப் மாங்ஜியவர்கள் பக்கோ சென்றிருந்த காலத்தில் இது விஷயத்தில் அனுதாபமுள்ளவர்களாய்க் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். பக்கோ வாசிகளின் கஷ்ட நிவாரணத்திற்கு பெரும் பணத்தேடி அதிக வேலை செய்யும் பர்மா சர்க்காரில் இந்திய சர்க்காருக்கு எழுதி இக்கோரிக்கையை நிறைவேற்றி பொதுஜனங்களின் நன்றியறிதலுக்குப் பாத்திரமாவார்களென நம்புகிறேன்.

அரசியல் நிலை:

இவ்வாண்டுமெது இந்துதேசச் சரித்திரத்தில் ஓர் முக்கிய வருஷமாகும். தேசத்தின் நன்மையை உத்தேசித்து பல பெரியார்கள் அரியபெரிய தியாகங்கள் செய்துள்ளார்கள். சாந்தநிலையும் அஹிம்சையே உருவான மகாத்மா காந்தியவர்கள் இந்தியா சுயேச்சையடைவதற்கு சாத்வீக சட்டமறுப்பு ஆரம்பித்துள்ளார்கள். இவர்களது இயக்கத்தை ஒப்புக்கொள்ளாதவர்கள் கூட இவர்களது தியாகத்தையும் அஹிம்சா நெறியையும் போற்றாமலிருக்கமுடியாது. இவ்வாண்டில் வெளிவந்த ஸைமன் கமிஷன் ரிபோர்ட்டை இந்தியர்கள் அனைவரும் ஏகோபித்து நிராகரித்து விட்டார்கள். இந்தியர்களுக்குள் சிறு விஷயங்களில் எவ்வளவு வேற்றுமையிருந்தாலும் உடனே இந்தியாவுக்குப் பூரண குடியேற்றநாட்டந்தஸ்து கிடைக்க வேண்டுமென்பதில் அனைவரும் ஏகோபித்திருக்கிறார்கள். வட்டமேஜை மகாநாட்டிற்குச் செல்லும் பிரதிநிதிகள் இந்தியர்களின் ஏகோபித்த உணர்ச்சியை உணர்ந்தே மனமாய் தேசத்தின் தேவையை அறிவிப்பார்கள் என நம்புகிறேன். நமது வைஸிராய் மிகத் தங்கமானவர். நமது கோரிக்கைகளில் மிகவும் அநுதாபமுள்ளவர். காங்கிரஸ் கலந்துகொள்ளாத வட்டமேஜை மகாநாட்டில் நமது கோரிக்கைகள் சரியாக வற்புறுத்தப்படாதென்று சந்தேகம் பலர்க்கும் இருந்துவருகிறது. ஜெயகர் சாப்ரு ஆரம்பித்த சமரச முயற்சி தோல்வியுற்றது தேசத்தின் துரதிர்ஷ்டவசமேயாகும். விடுதலையடைந்தவுடன் பண்டிதமோதிலால் நேருவுடன் வைஸிராயவர்கள் ஓர் சமரச முடிவுக்கு வருவதுவே சிறப்புடைத்தாகும்.

பர்மா பிரிவினை.

பர்மாவின் அரசியல் விஷயத்தில் மிக முக்கியமானது இந்தியாவிலிருந்து பர்மாவைப் பிரிப்பதுவேயாகும். ஸைமன் கமிஷன் அறிக்கையில் பர்மாவை உடனே பிரித்துவிட வேண்டுமென்று சிபார்சு செய்துள்ளார்கள். பிரிவினையை உடனே வேண்டுமென்று விரும்பாத பல தலைவர்களும் அமைப்புகளும் இருப்பதைக் கவனிக்க வேண்டுகிறேன். வட்டமேஜை மகாநாட்டிற்கு பர்மாவிலிருந்து தெரிந்தெடுத்திருக்கும் பிரதிநிதிகளெல்லாரும் பிரிவினைக் கட்சியைச் சார்ந்தவர்கள். இப்பிரச்னையானது வட்டமேஜை மகாநாட்டில் மிக முக்கியமாக விளங்குமாதலால் இதர கட்சித் தலைவர்களும் அதில் பங்கெடுப்பது மிகவும் அவசியமாகும். அந்துடன் பர்மாவிலுள்ள இந்தியர்கட்கு பிரதிநிதித்துவம் இல்லாதது வருந்தத்தக்கது. இவ்விரு குறைகளையும் சர்க்காரில் பூர்த்திசெய்துவைப்பார்களென நம்புகிறேன்.

பர்மாவிற்கு குடியேற்ற நாட்டந்தஸ்து கிடைக்குமளவில் பிரிவினை உகந்தது என்பது எங்கள் கொள்கையே யாவரும் பெரும்பாலராக பர்மியர்கள் பிரிவினையை விரும்பினால் நாங்கள் எதிர்த்து நிற்கப்போவதில்லை. இப்பிரச்னையை பர்மியர்களே தங்களுக்குள் நிர்ணயித்து முடிவுசெய்வது நன்மையாகும். இவ்விஷயத்தை ஆராய்ந்து விசாரிப்பது மிகவும் அவசியமாகும். ஸைமன் கமிஷன் அறிக்கை வெளிவந்ததும் செட்டிமார்களெல்லாம் பர்மாவில் பணங்கொடுப்பதை நிறுத்திவிட்டார்கள் என்ற வதந்தி எங்கும் பரவியது உண்மையல்ல என்பதை இதுவரை அனைவரும் அறிந்திருப்பார்கள். பிரிவினையானாலும் பர்மியர்கள் தங்களுடைய சொத்துக்களை இலவசமாய் எடுத்துக்கொள்ளலாம் என்ற தவறான எண்ணங்கள் சாமானிய ஜனங்களிடை பரவியிருப்பதாகக் கண்டு நம்மவர்கள் பயப்படத் தேவையில்லை.

ஏழாவது ஆண்டு அறிக்கையை நிறைவேற்றிக்கொள்வதை ஆமோதித்து திருவாளர் சா. அ. ச. ராமன்செட்டியார் அவர்கள் கீழ்கண்ட உரையை நிகழ்த்தினார்கள்:—

நமது தலைவர் இதுவரை பொருளியல் விஷயமாயும், அரசியல் விஷயமாயும் சங்க காரியங்களுடன் பேசியதைக் கேட்டிருக்கிறோம். சமூக விஷயங்களைப் பற்றி நான் சில சொல்லலாமென நினைக்கிறேன். உலகில் முன்னுக்கு வர விரும்பும் எந்த சமூகமும் காலத்திற்கேற்றவாறு தங்கள் பழக்கங்களை மாற்றிக்கொள்ள வேண்டும். ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்குப் பொருள் பெருக்கமும், அரசியல் சுதந்திரமும் எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு அவசியம் சமூக சீர்திருத்தத்திற்கும் உண்டு. நமது நாட்டில் சுயமரியாதை இயக்கத்தால் சில திருத்தங்கள் நடைபெற்று வருகின்றன. தொன்றுதொட்டு நாக்கட்டம் கடைசியாக நடந்த சில நிர்மாணங்கள் செய்தது அமுலுக்கு இருக்காலத்தில் நமது நாட்டில் பல செலவுகள் குறைந்திருந்தன. ஆனால் அவைகளெல்லாம் காலப்

(12-ம் பக்கம் பார்க்க.)

## அறிக்கை.

வருகிற 15,16-உ புதன், வியாழக் கிழமைகளில் நமது காரியாலயத்திற்கு விடுமுறை நாட்களாகையால் அடுத்த இதழ் 23-உ வியாழக்கிழமை வெளி வரும்.

மானேஜர்.

குமரன்

காரைக்குடி.

பிரமோதூதஹூ புரட்டாசி ௯உ

## சென்னைச் சட்டசபை.

சென்னைச் சட்டசபைத் தேர்தல் முடிவடைந்தது காங்கிரஸின் போரால் பலர் உள்ளே புகமுடியாமற் போய் விட்டது. தேசத்தை உத்தாரணம் செய்யவே பிறந்ததாக நடிக்கும் பல பார்ப்பனர் மூலைக் கொருவராகப் போக வேண்டியதாயிற்று. மந்திரிகட்சிக்கும் ஜஸ்டிஸ் கட்சிக்கும் போராட்டம் ஏற்படாதிருக்குமானால் பார்ப்பனரல்லாதார்வெற்றி வானுறவோங்கி வெற்றிக்கொடி பிடித்திருக்கும். நெல்லூர் மகாநாட்டு நிகழ்ச்சியிலிருந்து பார்ப்பனரல்லாதார் கட்சிக்குக் கலக்கமேற்பட்டது. டாக்டர் சுப்பராயனுவது திரு. ராஜனுவது தலைமைதாங்கும் நிலைமைபோய் திவான்பகதூர் முனிசாமி நாயுடு அவர்கள் தலைவராயினர். அதன்பின்னர் முதலாவது கிடைத்த பயன் ஜஸ்டிஸ் கட்சியில் பார்ப்பனரைச் சேர்க்கவேண்டு மென்ற தீர்மானமாகும். அத்தீர்மானத்தை நாடுமுழுமையும் எதிர்த்தாலும், ஒரு பகிரங்கமான மகாநாட்டைக் கூட்ட அச்சமுற்றுலும் அத்தீர்மானம் நிர்வாகக் கூட்டத் தீர்மானத்தில் எழுதிவைக்கப்பட்டிருக்கிறது. மந்திரிகட்சிக்கும் ஜஸ்டிஸ் கட்சிக்கும் போராட்டம் ஏற்படாதிருக்குமானல் சென்னைச் சட்டசபையில் பார்ப்பனர் அநேகமாகத் தலைகாட்டியிருக்கமுடியாது. ஒருகாலத்தில் பார்ப்பனராலேயே பெரும்பாகம் நிறைந்திருந்த சட்டசபை இன்று தமிழ்நாட்டுப் பார்ப்பனர் ஆறே பேரைக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். ஜஸ்டிஸ் கட்சியிலும் மந்திரி கட்சியிலும் பார்ப்பனரைச் சேர்த்துக் கொள்ளப் போட்டி போடப்பட்டதிலும் ஆறுபேரே உள் நுழைய முடிந்திருக்கிறது. சென்ற தடவை பத்துப்பேரிருந்தனர். இப்பொழுது சென்னை யுனிவர்சிட்டி, திரிச்சி நகரம், மதுரை நகரம், இராமநாதபுரம் ஜில்லா, வடஆற்காடு ஜில்லா, தஞ்சை ஜில்லா ஆகிய ஆறிடங்களிலிருந்து ஆறுபேர் சென்றிருக்கின்றனர் இந்த ஆறுபேரில் எவரும் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்திருக்கவில்லை யென்பது குறிப்பிடத்தக்கதாகும். ஜனங்களின் அபிப்பிராயத்துக்கு விரோதமாகத் தீர்மானஞ் செய்தாலும் ஐயர்மாரைச் சேர்க்கவும் வகையில்லை யென்பது கவனிக்கத் தக்கதாகும். நிற்க,

தமிழகத்தில் மந்திரிகள் யார் என்ற எண்ணம் எங்கும் பரவி நிற்கிறது. சட்டசபை அங்கத்தினர்களுள்ளும் இது தான் எண்ணமாக இருக்கிறது. இரண்டு கட்சி யேற்படாதிருந்தால் மந்திரிகள் யாரென்பதைப்பற்றி இவ்வளவு பரபரப்பு ஏற்பட்டிருக்காது. இப்பொழுதைய நிலையில் ஜஸ்டிஸ் கட்சியே பெரும் பகுதியாக இருப்பதால் மந்திரி சபை அமைக்கும் பொறுப்பை அவர்கட்கு விடப்படுதல்முறையாகும். அப்படிவிட்டால் கட்சித்தலைவரான திரு. முனிசாமிநாயுடுஅவர்கள் முதன் மந்திரியாகவும், திரு. ராஜன் இரண்டாவது மந்திரியாகவும் வருதல் கூடும் மூன்றுவது மந்திரி விஷயம் சிறிது நெருக்கடியை உண்டாக்குமென்பதிலையமில்லை செட்டி நாட்டுக் குமாரராஜா அவர்களை நியமிக்கக்கூடு மென்று சில பத்திரிகைகளில் செய்தி வெளிவருகிறது. சிறுவயதென்று ஒரு பத்திரிகை கூறுகிறது. மந்திரிவேலைக்கு எத்தனை வயதாகவேண்டு மென்பது நமக்கு விளங்கவில்லை, மந்திரி வேலைக்குக் கிழவர்களாக வேண்டுமென்பது அவசியமாவென்று கேட்கிறோம். நமக்குத்தெரிந்தமட்டில் திரு. சேதுரத்னமையரவர்களிருந்தஸ்தானத்தில் குமாரராஜா இருப்பது சாலச் சிறப்புடையதென்று துணிந்து கூறுவோம் இந்த ஸ்தானத்திற்கு திரு. ரத்தினசபாபதி முதலியார் பெயரும் குறிப்பிடப்படுகிறது. அவரும் மிகத்தகுதியுடையவரேயாவர். எவ்விதமாகவும் அவரைக் குறைகூற முடியாது. இந்த இடத்தில் நாம் கூறுவது ஒன்றுதான் உண்டு. மந்திரிசபை அமைப்புக் கட்சிப்பொதுவானதென்ற உணர்வையும் கட்சியினுள் எவராவது இருக்கட்டு மென்ற பெருந்தன்மையும் இல்லாவிட்டால் குழப்பத்தைத்தவிர வேறென்ன முடியும்? மந்திரி உத்தியோகத்தை யாருக்குக் கொடுப்பதென்ற கவலையும் ஒருவருக்கென்று சொன்னால் மற்ற பலர் எதிர்க்கட்சியில் சேர்ந்து விடுவார்களோ என்ற பயமும் ஏற்படுவது கட்சியின் பலவீனத்தையும் அங்கத்தினரின் சுயநலத்தையுமே சாட்டுவதாகும். இந்நிலை ஜஸ்டிஸ் கட்சிக்கு ஏற்படவில்லை யென்று சொல்லமுடியவில்லை. குறிப்பிட்ட சிலருடைய பெயர்களை யெழுதி கவர்னரிடம் கொடுப்பதென்றும் அவர்களுள் மூவரை அவர் தேர்ந்தெடுப்பதென்றும் ஒரு வதந்தி கிளம்புகிறது. இந்நிலை ஏற்படுமானல் வெட்கமென்று கூறுவோம். மந்திரி சபை அமைக்கும் பெருமை கட்சித்தலைவரைப் பொறுத்ததாகும். அப்பொறுப்பை இழந்து கவர்னர் பொறுப்பில் விடுதல் அழகன்று. இதற்குத் தலைவரே வழிகாட்டியாதல் வேண்டும். திரு முனிசாமிநாயுடு அவர்கள் மந்திரி பதவி தமக்கு வேண்டாமென்று தியாக உணர்வோடு சொல்ல முன்வந்தால் வெகு எளிதாக முடிவடைதல் கூடும். மகமதியர்கள் தங்கட்கு ஒரு மந்திரி ஸ்தானம் வேண்டுமென்று முயல்கின்றனர் அவர்கள் ஒற்றுமைப்படுவார்களானல், ஜஸ்டிஸ் கட்சியார் உரம் குறையக்கூடுமானல் இன்னுஞ் சிறிது குழப்பமாகும். கனம் சுப்பராயன் ஒரு கட்சியாகி மந்திரி சபையைத் தொடர்ந்து நடத்தக் கூடுமென்றும் அப்படியானல் ஜஸ்டிஸ் கட்சி எதிர்க்கட்சியாக இருக்கக்கூடுமென்றும் சொல்லப்படுகிறது. இதில் ஜஸ்டிஸ் கட்சிக்கு விசேஷ பயனிருப்பதாகக் கூற முடியாது. எதிர்க்கட்சியாக இருப்பதானல் அரசாங்கத்தை யெதிர்த்து ஸ்தம்பிக்கச் செய்யும் அளவு வரை போகக்கூடிய தன்மை கட்சிக்கும் கட்சி அங்கத்தினருக்கு மிருக்கவேண்டும். இல்லாதவரை எதிர்ப்பு மந்திரிகளை நேருக்கு நேராகப் பிடிப்பதைத் தவிர விசேஷ சத்திருக்க முடியாது.

இப்போது சட்டசபையில் சென்றிருப்பவர்கள் பெரும்பாலும் ஜமீன்தாரும் பணக்காருமாகவே இருப்பதைக் காணலாம். இவர்களுள் எவர் மந்திரியாக வந்தாலும் எக்கட்சி உரம் பெற்று நின்றாலும் பொது ஜனங்கட்கு நன்மை கிடைப்பதென்பது நாட்டின் கிளர்ச்சியையும் உணர்ச்சியையும் பொறுத்ததேயாகும். நம்முடைய இயக்கத்தைப் பொறுத்த வரையில் ஐயர்மார் ஆதிக்கம் ஒழிந்ததே போதுமானதாகும். இரண்டு கட்சி பிரியாமலிருந்திருக்குமானல் ஐயர்மார் இடையில் புக முடியாது. இப்பொழுதைய நிலையில் இரண்டிலும் அவர்கள் புகுந்து சிறிது ஆதிக்கம் பெறுதல் கூடும். என்றாலும் பொதுஜன உணர்ச்சிக்குச் செவி சாய்க்காத கட்சிகள் இருக்கமுடியாதென்று நமது நேயர்கட்குத் தெரிவிக்கிறோம்.

## உள்ளூர்ச் செய்தி

| | |
|---|---|
| சென்னை உண்டியல்வட்டம் | 0— 2—0 |
| ரெங்கூன் உண்டியல்வட்டம் | 0— 8—0 |
| பவுன் விலை | 13-10—0 |
| வெள்ளிக்கட்டி | 49—8—0 |

## தந்திச் செய்தி.

இரங்கூன், செப்டம்பர் 24

| | | |
|---|---|---|
| படகு நெல் | 130 | 131 |
| சயில் நெல் | | 130 |
| பெரியமில்லரிசி ஸ்பெஷல் | 330, | 332,8 |
| நசேன் சிறிய மில்லரிசி | | 355 |
| நசேன் எஸ். க்யூ | | 370 |
| மீடான், பஜார் | 365 | 367,8 |
| மீடான் எஸ். க்யூ | | 380 |
| புழுங்கலரிசி (ரெடி) | 385 | 410 |
| யாதலே | 390 | 410 |
| மீடான் | 365 | 380 |
| நாசேன் | 350 | 365 |
| பழைய பவுன் | | 13-12-0 |
| புதிய பவுன் | | 13-10-6 |
| தவணைவட்டி | | 0-7-6 |

## இரகசிய தந்தியில்லா டெலிபோன்.

### டச்சு நிபுணரின் ஆராய்ச்சி.

தந்தியில்லா டெலபோனில் இரகசியமாகச் செய்திகளை யனுப்புவதற்கான முறைகளை ஓர் டச்சு நிபுணர் கண்டுபிடித்து ஹாலண்டுக்கும் கிழக்கிந்தியத் தீவுக்கும் செய்தியனுப்பிப் பரீட்சித்து வருகிறார். இச் செய்திகளை நடுவில் எவராலும் உணர்ந்துகொள்ள முடியாதாம். இதற்கென்றே செய்து வைக்கப்பெற்றிருக்கின்ற ஒரு விசேட ரிசீவரில்தான் நன்றாகக் கேட்டுக் கொள்ளமுடிகின்றதாம்.

## காரைக்குடி முனிஸிபாலிட்டி.

### சண்டை ஒருவாறு ஒழிந்தது.

### திரு. பெரியணன் செட்டியார் வைஸ்சேர்மன்.

நேற்று மாலையில் முனிஸிபல் மீட்டிங் கூடியது. அதில் திரு மு. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் "வைஸ் பிரஸிடெண்டாக" ஏகமனதாகத்தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். முனிஸிபாலிட்டியில் இனி ஒருவாறு சண்டையின்றி நடைபெறுமென்று தெரிகின்றது. இந்த ராஜியை ஒட்டி திரு என். எஸ். வெங்கட்டராமய்யரவர்கள் M.A.L.T தமது ஸ்தானத்தை ராஜீநாமா செய்துவிட்டதாகத் தெரிகிறது. இந்தமீட்டிங்கிற்கு தஞ்சாவூர் ராவ்பகதூர் ராமநாதன் செட்டியார், திரு சித. நா. ராம. நாராயணன் செட்டியார், திரு என். எஸ் வேங்கடராமய்யர் திரு சி. மு, அரு முத்துராமன் செட்டியார் ஆகிய நால்வர் தவிர மற்ற எல்லோரும் வந்திருந்தனர்.

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து சிங்கப்பூருக்கு புறப்படும் தேதி வருமாறு:—

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| சாந்தியா | 27—9—30 |

கப்பல் சிங்கப்பூரிலிருந்து நாகபட்டணம் வந்து சேரும் தேதி வருமாறு

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரோணு | 25—9—30 |

கப்பல்கள் புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர் செய்கோன் ஹாங்கொங் சைனு ஜப்பான் முதலிய துறைமுகங்கட்குப் புறப்படும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| அஸி. லி. ரிடோ | 1—10—30 |
| அப்பாஸ் | 29—10—30 |

## ஐந்து நாளில் விதவை.

ஈரோட்டிலுள்ள திருவாளர் ஆறுமுகம் பிள்ளை என்பவர் தனது மகளுக்கும் தனது மைத்துனர் மகனுக்கும் ஜோஸ்யாதி பொருத்தங்கள் யாவும் அமையப் பார்த்து, சுப நாள், சுப நட்சத்திரம், சுப லெக்னம் என்ற நேரத்தில் முகூர்த்தம் வைத்து, பார்ப்பனர்க்கு ஒரு சிறிதும் சோணமல், அம்மி மிதித்தல் அருந்ததி (பகலில) பார்த்தல் முதலிய எல்லாச் சடங்குகளும் சிறிதும் தவறாது நடத்தித் திருமணம் செய்து வைத்தார். அதிலும் இவர் பரம்பரையாக தெய்வத்தினிடத்து மிகுந்த பயபக்தி விசுவாசம் கொண்டுள்ள நூலத்துதித்தவராகையால் சாமியிடத்தில் வாக்குக்கேட்டு உத்தரவு பெற்ற பின்னரே திருமணம் நடத்தி வைத்தார். எனினும் திருமணம் நடந்த ஐந்தாம் நாளே மணமகன் உயிர் துறந்தார். பெண் விதவையாகி விட்டது. அந்தோ! பரிதாபம்! அப் பெண் சாகும் வரை வெள்ளை சேலையுடன் வாழவேண்டும். அவருக்கு வாக்களித்த தெய்வமும், ஜோசியரும், மந்திரம் ஓதிய காசுபறித்தப் பார்ப்பனனும் சற்றும் உதவவில்லை. இதிலிருந்தாவது மக்கள் உண்மை அறிவு பெறுவார்கள் என நம்புகிறேன் என்று ஒருவர் தெரிவிக்கிறார்.

## ரயிலில் திருட்டு.

சென்ற 12ந் தேதி திருநெல்வேலியிலிருந்து 24ம் நம்பர் ரயிலில் சென்னைக்குத் தனிமையாகப் பிரயாணஞ் செய்த சோமசுயம்மாள் என்ற பிராமண விதவை சுமார் 900 ரூபாய் பெறுமான நகைகளடங்கிய ஒரு பெட்டியைப் பறிகொடுத்ததாக போலிசில் பிராது செய்திருக்கிறார்.



## பழக்கத்தை மீறிய திருமணம். டிமான்ஷின் கருத்து.

செய்கோன் "டிமான்ஷ்" பத்திரிகையில் பின்வருமாறு எழுதப்பட்டிருக்கிறது:—

தென்னிந்தியாவில் ஒரு பெரிய பத்திரிகை நடத்திவரும் ஆசிரியர் திரு. சொ. முருகப்பா ஓர் பாலிய விதவை மரகதவல்லியாரை மணஞ் செய்து கொண்டார். இந்தப்புது முறைத் திருமணம் ஆடம்பரச் செலவின்றியும் பழைய சடங்குகளில்லாமலும் காரைக்குடியில் சமீபத்தில் நடந்தேறியது. திரு. முருகப்பா, பாங்கர் தொழில் செய்யும் செட்டியார் வகுப்பைச் சேர்ந்தவர். மரகதவல்லியார் விசுவப்பிராமண வகுப்பைச் சேர்ந்தவராவர். இந்தியா சரித்திரத்தில் இந்த நூதனத்திருமணம் ஒரு அபூர்வமான புது நிகழ்ச்சியாகும். பழைய வைதீக சடங்குகளையும் பழக்கங்களையும் பலரும் வெறுக்கும் காலம் இது. ஜாதி முறை ஒழிய வேண்டுமென்று எழுதியும் பேசியும் உயர்வடைந்த பெரியார் திரு. சொ. முருகப்பாவார். ஜாதி யொழிந்தால் உலகமே உயரும் என்ற கொள்கையும் ஆவலும் உள்ளவர். சொல்லைச் செயலில் நடத்திக்காட்டியவர் இவரே யாவர். தன் ஜாதியை விட்டு மற்றொரு ஜாதியில் விதவையை மணஞ் செய்து கொண்டதால், பொதுஜன வெளி அபிப்பிராயத்தை எதிர்த்துவந்த முற்போக்காளர். இவர் செயலைமற்றவர்களும் கண்டு அதை யொட்டி நடப்பார்களாக!

## தேவகோட்டைத் தாலூகா போர்டுக் கூட்டம்,

சென்ற வியாழனன்று பிற்பகலில் தாலூகா போர்டுக் கூட்டம் நடைபெற்றது. 19 மெம்பர்கள் விஜயஞ் செய்திருந்தனர். கோட்டையூர் திருவாளர் க. வீ. அழ. இராமநாதன் செட்டியாரவர்கள் மெம்பர்களுடன் மெம்பராக இருந்தார்கள். எப்பொழுது மெம்பரானுரென்று பலரும் ஆச்சரியப்பட்டனர். விசாரித்தபோது திரு. முருகராஜய்யங்காரவர்களின் ஸ்தானத்திற்கு அவர்கள் வந்திருப்பதாகச்சொல்லப்பட்டது. பல விஷயங்கள் முடிவு செய்யப்பட்டன. ஜில்லா போர்டு ஸ்தானமொன்றுக்குத் தேர்தல் நடைபெற்றது. தேவகோட்டை திருவாளர் பழ. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்களும் காரைக்குடி திருவாளர் சித. நா. ராம நாராயணன் செட்டியாரவர்களும் போட்டி போட்டனர். திரு. சிதம்பரம் செட்டியாரவர்கட்கு 12 வோட்டுகளும் திரு நாராயணன் செட்டியாரவர்கட்கு ஏழு வோட்டுகளும் கிடைத்தன. எனவே திரு சிதம்பரம் செட்டியாரவர்கள் ஜில்லா போர்டு மெம்பராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். எலெக்ஷன் புலியும், கும்பிடுவதில் கைதேர்ந்தவரும், செட்டிமார் நாட்டில் ஆஸ்திகத்தை நிலை நாட்டுவதில் முன்னிற்பவரும் பத்திரிகைக்குத் தங்கமான அபிப்பிராயங் கொடுப்பவருமான திரு நாராயணன் செட்டியாரவர்கள் தோல்வியுற்றது வருந்தத்தக்கது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## நம்பிக்கையில்லாத் தீர்மானம்.

பழநித் தாலூகா போர்டின் கூட்டம் ஒன்று 15-9-30 மாலை நடந்தது. பிரஸிடெண்டு ஸ்ரீமான் வீ. சி. த. நா. சிதம்பரம் செட்டியார் ஆஜராகாதபடியால் வைஸ் பிரஸிடெண்டு ஸ்ரீமான் முத்தச்சாமி முதலியார் தலைமை வகித்தார், 13 மெம்பர்கள் ஆஜராயிருந்தார்கள். கிரனூர் ஜனப் எஸ். முகம்மது இஸ்மாயில் சாய்பு, பிரஸிடெண்டு ஸ்ரீமான் வீ. சி. த. நா. சிதம்பரம் செட்டியார் பேரில் நம்பிக்கை இல்லை என்ற தீர்மானம் கொண்டு வந்தார். அதற்கு அனுமதி கொடுக்கப்பட்டுப் பிரேரேபணை 30-9-30-ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## பணம் எங்கே? பத்திரிகை வாயிலாக தெரிவிப் பார்களா.

முன் ஊழியன் பத்திரிகையில் பிரகாமாயிருந்தபடி நான் பொது ஜனங்களிடம் சேகரித்த ரூபா 150 உப்பு நிதிக்கென அனுப்பியுள்ளேன். இதேமாதிரியாக இன்னும் இம்மலாயாவிலிருந்து இதர சகோதரர்களும் அனுப்பியிருக்கின்றார்கள். நிற்க, ஸ்ரீமான் ராஜகோபால ஆச்சாரியாரவர்கள் தொண்டாற்றிச் சிறைபுகும்போது ரூபா 12000-த்துக்குமேல் வசூலாயிருப்பதாக பத்திரிகைகளின் வாயிலாகப் பார்த்தேன். வேதாரண்யம் உப்புப்போருக்கு பலவகையிலும் சேர்ந்த நிதி சுமார் ரூபா 20000 வரை யிருக்கலாமென்று நினைக்கின்றேன். அப்படியிருக்க பத்திரிகைகளில் இன்னவர் இன்னால் இவ்வளவு கிடைத்திருக்கிறது என்று பிரசுரம் செய்திருக்கிறார்களேயொழிய, இவ்வளவு ரூபாயும் இன்னாரிடமிருக்கிறது அல்லது ஏதாவது ஓரிடத்திற்கு அனுப்பியிருக்கிறோம் அல்லது இன்ன செலவு செய்திருக்கிறோம் என்று பொது ஜனங்களுக்கு எந்த தேசாபிமானியும் பத்திரிகை வாயிலாக தெரிவித்தார்களில்லை. இவ்விஷயம் பொது ஜனங்களுக்கு முக்கியமாக தெரிவிக்கவேண்டியதாக இருப்பதால் தங்களின் பத்திரிகை வாயிலாக இதை பிரசுரம் செய்து பொதுஜனங்களுக்கு விளம்பரப்படுத்துமாறு கேட்டுக்கொள்கிறேன். நிற்க, இவண் யென்னிடம் பணமளித்த நண்பர்களிற் சிலர் மேல் கண்ட நிதிக்கென வசூலித்த தொகையை என்ன செய்தார்கள், யாரிடம் கொடுத்திருக்கிறார்கள் என்று விபரம் கேட்டதினல் இத்திருபம் எழுத நேர்ந்தது என்று மலாக்கா, P. S. கோவிந்தராஜலு எழுதுகிறார்.

## 8-அணவுக்காகத் தற்கொலை.

மதுரை தெற்கு வெளிவீதி அழகிரிசாமி நாயக்கர் சந்தில் 16-ந்தேதி இரவு மாரியம்மாள் என்ற சுமார் 25 வயதுடைய ஸ்திரீ தற்கொலைபுரிந்து உயிரைமாய்த்துக்கொண்டாள். பெருமாள் நாயுடு என்பவர் தனது முதல் தாரத்திற்குக் குழந்தைகளில்லாதவை யுத்தேசித்து இறந்துபோன மாரியம்மாளை இரண்டாம்தாரமாக 2 வருடத்திற்கு முன் விவாகஞ் செய்துகொண்டதாயும், இரு மனைவிகளும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக்கொள்வதை யுத்தேசித்துச்சுமார் 1½மாதத்திற்குமுன் 2-வது மனைவியைத் தனியாகப் பிரித்து அவளுக்கு நாளுக்கு 4 அணு வீதம்கொடுத்துவந்ததாயும், சென்ற ஆவணி மாதத்திற்குப் பெருமாள்நாயுடு, மாரியம்மாளிடம் 7 ரூபாய் கொடுத்ததாயும் அவள் தனக்கு மீதமுள்ள 8 அணவையும் கொடுக்கும்படி கேட்டதாயும், நாயுடு இதை மறுக்கவே 8 அணு விஷயமாய் இருவருக்கும் சச்சரவு ஏற்பட்டதாயும், நாயுடு அந்த ஸ்திரீக்கு இரண்டு அடிகொடுத்ததாயும், அன்று சாயங்காலம் வீட்டின் கதவு தாளிடப்பட்டிருக்க இரவில் அந்த வீட்டுத் திண்ணையில் படுத்துத்தூங்கியதாயும் மறுநாட் காலையில் வெகுநேரம் வராததவுதிறக்காமையால் உடைத்து உள்ளே செல்ல அங்கு மாரியம்மாள் தேகம் கூரையினின்றும் உயிரற்றுத் தொங்கிக்கொண்டிருந்ததாயும் சொல்லப்படுகிறது.

பிரேதவிசாரணை செய்த இன்ஸ்பெக்டர் தற்கொலையினுல் மரணமென்று பதிவு செய்திருக்கிறார்.

## இங்கிலாந்து ஆஸ்திரேலியா விமானப் போட்டி.

15½ நாட்களுக்குள் இங்கிலாந்திலிருந்து ஆஸ்திரேலியாவுக்குப் பறந்து செல்லும் விமானப் போட்டியொன்று அடுத்த மாதம் நடக்கப்போகின்றது. ஸ்டாக்லேன் ஆகாய விமான நிலையத்தில் இதற்கான விமானங்கள் செய்யப்படுகின்றன. இப் போட்டியில் காப்டன் பெர்னர்டு, காப்டன் எப். ஆர். மாத்யூஸ் (அமிஜான்சனின் ஆசிரியர்) மூரேயஸ், மேஜர் பிக்தார்ன், காபட் ஆகிய ஐவரும் கலந்துகொள்வார்கள். ந்யூஜிலாந்து பெண் விமானியாகிய மிஸ் க்ளிபோர்டும் ஒருக்கால் கலக்கலாமென்று தெரிகிறது.

விமானிகள் ஒரே தினத்தில் புறப்படமாட்டார்கள். அவர்கள் பெரும்பாலும இந்தியா வழியாகவே செல்வார்கள். ஒருவர்மட்டிலும் ருஷியா வழிப்போவது எளிது என்கின்றார்.

## கும்பகோணம் தாலூகா சுயமரியாதை மகாநாடு.

(நமது நிருபர்)

குறிப்பிட்டபடி சென்ற ஞாயிறன்று திருச்சிறையில் மகாநாடு வெகு சிறப்பாக நடைபெற்றது. காலை சுமார் எ-மணிக்கு கும்பகோணம் ஸ்டேஷனில் திருவாளர்களான சொ. முருகப்பா, ராமசாமிப் பெரியார், எஸ். ராமச்சந்திரன், முதலியோரை வரவேற்புக் கழகத்தார வரவேற்று ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். திரு வெங்கட்டராம நாயுடு அவர்கள் வீட்டில் தங்கி க-மணிக்குப் புறப்பட்டனர் திருச்சிறையிலிருந்து பலர் எதிர்கொண்டழைக்க மகாநாட்டுப் பந்தலுக்கு வந்து சேர்ந்தனர். தென்னந்தோப்பில் பெரிய அலங்காரப் பந்தல் போடப்பட்டிருந்தது. சுமார் ௪000 ஜனங்கள் கூடியிருந்தனர். பெண் மக்களும் விஜயஞ் செய்திருந்தனர். சில முக்கிய மானவர்கள் வருமாறு:—ஈ. வே. ராமசாமியார், சொ. முருகப்பர், எஸ். ராமச்சந்திரன், வரவேற்புக் கழகத் தலைவர் பி. அழகப்பன், ஏ. எஸ் ஜான், ப. ஜீவானந்தம், அ. பொன்னம்பலனுர், N. B. காளியப்பன், கே. ராமய்யா, K. C. வெங்கட்டராம நாயுடு, V.சடைமுத்து, அழ.க. காசிநாதன் அலம்கான் சாயபு, ராம. அழ. சிக. சிதம்பரஞ் செட்டியார், தெ. பழ. மெ. பழனியப்ப செட்டியார், ராம. சுப்பிரமணியம், ராம. சிதம்பரம், கருப்பையா நாடார் முதலியோராவர். திரு. பி. அழகப்பன் அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைக்கும்படி கேட்டுக் கொண்டதும் திரு. எஸ் ராமச்சந்திரன் B. A B. L. அவர்கள் எழுந்து, "திறந்து வைக்குமுன் சில வார்த்தைகள் சொல்லி விட்டு அப்பணியைச் செய்கிறேன். கொடியேற்றுவிழா ஒன்று சமய மகாநாடுகளின் ஆரம்பத்தில் நடைபெறுவது வழக்கம். அக்கொடியில் சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம், முன்னேற்றம் என்று குறிக்கப் பட்டிருக்கும். இதை அடிப்படையாகக் கொண்டு நம் இயக்கம் இயங்குகிறது. ௧00-க்கு கக-ஏழைகளாக இருக்கின்றனர். அபிவிருத்தி முன்னேற்ற மென்பவைகளைக் கஞ்சி ரூபமாகவும் உடை ரூபமாகவும் பார்க்கவேண்டும். அவ்விரண்டுக்கும் ஒருவராவது கஷ்டப்படாமல் செய்யவேண்டும். சுயமரியாதை இயக்கத்தின் பயன் இது தான் என்று நான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். இதை நன்கு சிந்தித்து பர்னுட்ஷா என்னும் பெரியவர் ஏழு ரூபமாக இருந்திருக்கிறதென்று கூறுகிறார். பலவிதமாகச் செய்து பார்த்து இப்போது சொத்து யாவருக்கும் பொது, ஒருவனுக்கு ஒருவன் ஏற்றத் தாழ்வாக இருக்கக்கூடாதென்று ருஷ்யர்கள் முறைகளைக் கையாளுகிறார்கள். இங்கே ஜாஸ்தியான கஷ்டம் மதத்தினுலும் ஜாதியினுலும் ஏற்பட்டிருக்கிறது. அவைகளைப் போக்கி சமத்துவத்தை ஏற்படுத்தவேண்டும். இம்மாதிரியான இயக்கத்தைப் பலர் எதிர்ப்பார்கள். என்றாலும் அதைப்பற்றிக் கவலைப்படாமல் வளர்க்கவேண்டுமென்று கூறி இம் மகாநாட்டைத் திறந்து வைக்கிறேன்."

இதன்பின்னர், வரவேற்புக்கழகத் தலைவர் தமது முகவுரைப் பிரசங்கத்தைச் செய்தார். திரு. பொன்னம்பலனுர் சுயமரியாதைக் கீதங்கள் பாடினுர். திரு. R. C. வெங்கட்டராம நாயுடு அவர்கள் திரு. முருகப்பா அவர்களைத் தலைமைவகிக்கும்படி கேட்டுக் கொண்டார். அதை ஆமோதித்து A. குப்புசாமி பிள்ளை, ஈ. வே ராமசாமியார் முதலியோர் சிறிது பேசினர். பின்னர் தலைவர் தமது முகவுரைப் பிரசங்கத்தைச் செய்துமுடித்தார். (மூன்றும்பக்கம் பார்க்க) திரு. பொன்னம்பலனுர் சுயமரியாதைக் கொள்கைகளைப்பற்றி இரண்டுமணி நேரம் அருமையான உபந்யாசம் செய்தார். இவ்வளவோடு முற்பகல் நடவடிக்கை முடிவானது. பிற்பகல் 2-30 க்கு மீண்டும் மகாநாடு கூடியது. சுயமரியாதை கீதங்கள்பாடப்பட்டன. நாகை திரு. காளியப்பன் அவர்கள் ஈரோட்டில் செய்யப்பட்டுள்ள தீர்மானங்களைப் பிரேரேபித்துச் சிறிது நேரம் பேசினுர். திரு ப. ஜீவானந்தம், ராம. சுப்பிரமணியம், R.S. சுப்பிரமணியன், கா. வி. சங்கரலிங்கம், அம்ருதீன் சாயபு, ஈ. வே. ராமசாமியார் முதலியோர் தீர்மானங்களின் அவசியத்தை விளக்கியும் ஆதரித்தும் பேசினர். தீர்மானங்கள் ஒப்புக் கொள்ளப்பட்டன. பின்னர் தலைவர் தமது முடிவுரையாகச் சிறிது நேரம் பேசினர். சட்டத்தின்படி நடந்த ஒருவர் "விவேகானந்தர் அமெரிக்காவுக்குச்சென்று மதத்தை ஸ்தாபித்தாரே" என்றும் வைத்தியம் ஜோஸ்யம் முதலியன உண்மை பெற்று ஒப்புக்கொள்ளக் கூடாதா" என்றும் கேட்டார். தலைவர் "எதுவானாலும் உண்மையா, புரட்டா என்று பார்ப்பதே நம்வேலை. மருந்து நோயைக் குணப்படுத்தினுல் நம்புவோம், குணப்படுத்தா விட்டால் கைவிட வேண்டியது தான்" என்று கூறி ஜோஸ்யத்தைப்பற்றி நீண்டநேரம் பேசினர். ஜோஸியர்கள் செய்யும் புரட்டும் ஜோஸிய நெறியில் உள்ள புரட்டும் இன்னின்ன வென்று விளக்கமாகக் கூறினர். இதற்குமேல் நம்பிப் பரிகாரங்கள் செய்வதனுல் ஏமாறவேண்டாம். ஜாமீன் வாங்கிக் கொண்டு செய்யுங்கள் என்று சொன்னுர். இரவு சுமார் 7-30க்கு நன்றியுடன் மகாநாடு முடிவடைந்தது. வந்தனம் கூறப்பட்டுத் தலைவர்கட்குப் பூமாலைகள் அணிவிக்கப்பட்டன. இரவு சாப்பாட்டின் மேல் தலைவர்கள் முதலியோர் கும்பகோணத்திற்கு ஜெய கோஷத்துடன் வழியனுப்பப்பட்டனர். மகாநாட்டுத் தினத்தில் அங்குள்ள கோவிலும் ஐயர்மார்களின் காபிகிளப்புகளும் அச்சங்கொண்டு அடைபட்டுக் கிடந்தன.

## செட்டிமார் நாட்டில் சுயமரியாதைப் பிரசாரம்.

புரட்டாசிமீ 12உ ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30க்கு மேல் கொ. லெட்சுமிபுரத்தில் சுயமரியாதைப் பிரசங்கம் நடைபெறும். சொ. முருகப்பர் பொன்னம்பலனுர் முதலியோர் பேசுவார்கள்.

## கரந்தைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி. தஞ்சை.

நிகழும் பிரமோதூத புரட்டாசி 9-10-11, (25, 26, 27—9—1930) ஆம் நாட்களாகிய வியாழன், வெள்ளி, சனிக்கிழமைகளில், இவ்வாண்டு விழாக்கள் சங்கக் கல்லூரியில் கீழ்க் குறித்தவாறு நடைபெறும்.

### பஞ்சாபகேசன் கழக ஆண்டுவிழா.

மாணவர் பந்தய விளையாட்டு புரட்டாசி 9 (25—9—1930) நடைபெறும். திருவாளர் T. V. இரத்தினசாமி அவர்கள், தஞ்சை நாட்டாண்மைக் கழகக் கல்லூரி மேற்பார்வையாளர். (தலைமை வகிப்பார்.)

### கலைமகள் திருவிழா.

புரட்டாசி 10 (26—9—1930) வெள்ளி காலை 9 மணிக்கு கண்காட்சிக்கூடத்திறப்பு திருவாளர் T. V. கோபாலசாமி அய்யர் அவர்கள், B. A., Retired Dy. Collector. தலைவர். மாலை 3 மணிக்கு பரிசளிப்பு. திரு T. V. இரத்தினசாமி அவர்கள், தஞ்சை நாட்டாண்மைக் கழகக் கல்லூரி மேற்பார்வையாளர் தலைவர்.

### கல்லூரி ஆண்டுவிழா.

புரட்டாசி 11 (27—9—1930) சனி காலை 8 மணிக்கு திருவாளர் இராவ்பகதூர் A. T. பன்னீர்ச்செல்வம் அவர்கள், M. L. C., Bar-at-Law, தலைமையில் நடைபெறும். அன்பர்கள் யாவரும் வந்தருளுமாறு வேண்டுகின்றேன் என்று தலைமையாசிரியர் சிவ. குப்புசாமி எழுதுகிறார்

## லண்டன் துறைமுகம் பார்வையிடப் பொதுஜனங்களுக்கனுமதி.

லண்டன் துறைமுகத்தைச் சாதாரணமாகப் பொது ஜனங்கள் பார்வையிட அநுமதிக்கப்படுவதில்லை. அடுத்த வாரம் முதல் இது மாறுபட்டுப் பொது ஜனங்கள் பார்ப்பதற்கு அநுமதியளிக்கப்படுமென்று தெரிகிறது. லண்டன் துறைமுகம் உலகிலேயே மிகவும் விஸ்தாரமானதாகும். 245 ஏக்கர்கள் விஸ்தீர்ணமுள்ளது. லண்டனுக்கு வேண்டிய 24000 டன் தானியம் இங்கு சேகரிக்கப்பட்டு மணிக்கு 500 டன்கள் வீதம் இங்கிருந்து வெளியே எடுத்துச் செல்லப்படுகிறது. 26 மைல் தூரம் ஆற்றுப் பிரதேசம் 45 மைல் துறைமுக இறக்கப் பிரதேசம்; 700 ஏக்கர் கப்பல் நிற்கக் கூடிய இடம், பல கப்பல்கள் எப்பொழுதும் நிற்பது, எல்லாவற்றையும் சேர்த்துப் பார்க்குங்கால் ரமணியமான காட்சியாகவே யிருக்கும்.

(9-ம் பக்கத்தொடர்ச்சி.)

போக்கில் கைவிடப்பட்டு டம்பச் செலவுகள் மிக விரிந்து விட்டன. மனைவி மக்களைப் பிரிந்து கடல் கடந்து நாடாறு மாதம் காடாறு மாதமாய்த் தங்கள் வாலிபமெல்லாம் போக்கும் நம்மவர்கள் இங்கு மிக அருமையாய்ப் பல வருடங்கள் தேடிய பொருளை மிக சீக்கிரத்தில் வீணில் விரயஞ் செய்துவிட்டு மறுபடியும் எந்த தொலைக்குப் போகலாமென்று எண்ணிவாறன்னார்கள். இங்கு தொழிலின் சௌகரியத்தின் அவசியத்தை முன்னிட்டு ஒரு கார் வைத்துக்கொள்ள விரும்பாதவர்கள் நமது நாடெங்கும் கார் மயமாக்கிவிட்டார்கள். காரைக்குடியில் மாத்திரம் ஒரு நாளைக்கு அறுபதினாயிர ரூபாய்க்கு வியாபாரம் நடக்கிறதென்றால் செட்டிமார் நாட்டின் வியாபாரம் எவ்வளவு? வெளி நாட்டிலிருந்து கொண்டுபோகும் சாமான்கள் எவ்வளவு என்று நீங்களே யோசித்துக்கொள்ளுங்கள். இவ்விதச் செலவு நெடுங்காலஞ் செய்ய முடியாதென்பதை நான் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். மலாயா நாட்டில் ரப்பர் விலை இறக்கத்தால் வியாபாரக் குறைவு ஏற்பட்டிருக்கிறது. சைகோனில் வட்டி விகிதம் ஏற்படுத்தி ஆங்கில மல்லது பிரெஞ்சு பாஷையில் கணக்குகள் வைத்துக் கொள்ளச் சொல்லப்பெறுகிறது. கொழும்பிலும் வட்டிச் சட்டம் ஏற்பட்டிருப்பதுடன் உலக வியாபார நிலை சீர் குலைந்திருப்பதால் முன்னையவ்வளவு லாபமில்லை. பர்மாவின் அரசியல் நிலை குழப்பமாயிருக்கிறது. இவ்வூர் முக்கிய விளைபொருள்கட்கு போதுமான விலை கிடைக்காததால் நம்மவர் தொழிலில் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. பர்மாவில் தேசிய ஊக்கம் அதிகரித்து வருகிறது. அது மிகவும் நியாயமே. நம்மவர்களால் பர்மாவிற்கு என்ன நன்மைகள் ஏற்பட்டிருந்தாலும் நமது தொழிலை அந்நியர்களது தொழிலாகக் கருதுகிறார்கள். பிற்காலத்தில் தேசிய நோக்கத்திற்கு ஒத்தவிதமாய் நமது தொழிலை மாற்றிக் கொள்ள வேண்டியது அவசியமாகும். ஆகலால் காலதேச வர்த்தமானங்களை நோக்கி நமது சமூகத்தில் பல சீர்திருத்தங்கள் செய்து செலவைக் குறைப்பது மிகவும் அவசியமாகும். வாழ்க்கையில் இன்பமாயிருப்பதற்கு வேண்டிய சாதனங்கள் அவசியமேயொழிய டம்பத்திற்கு செலவிடுவது கொஞ்சமும் அழகல்ல. சமூக சீர்திருத்தத்தில் கவனிக்கவேண்டிய மற்றொரு முக்கிய விஷயம் 'இல்லக் கிழத்தியை வெளிநாட்டிற்கு அழைத்து வருதல்' இதனாலேற்படும் நன்மை தீமைகளைப்பற்றி சில வருடங்களாக பத்திரிகைகளிலும் பிரசங்க மேடைகளிலும் பேசப் பெற்று வருவதால் இங்கு அதிகமாய் நான் விஸ்தரிக்க வேண்டுவதில்லை. சென்ற சில தினங்களாக போக்கிரிகளின் தொந்தரவுகள் அதிகமாயிருப்பதாக நம்மவர்கள் சங்கத்திற்கு தெரிவித்து வருகிறார்கள். அவர்களை அடக்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் நடந்து வருகின்றன. ஆனால் இத் தொந்தரவுகளெல்லாம் மனைவிமார்களை வெகு காலம் பிரிந்திருப்பதினாலேயே ஏற்படுகிறது. இயற்கை வாழ்விற்கும், தேக சுகத்திற்கும், மனை யின்பத்திற்கும், ஆத்மலாபத்திற்கும், பொருளீட்டுவதில் ஊக்கத்திற்கும் மனைவியோடு வாழ்வது இன்றியமையாததாகலால், நம்மவர்களில் சாத்தியமானவர்களெல்லாம் உடனே தங்கள் மனைவிமார்களை உடன் அழைத்துவரக் கோருகிறேன். உடனழைத்துவருவதற்கு மற்று மோர் முக்கிய காரணமுள்ளது. நம்மவர்கள் இங்கு படும் பாட்டை நம் பெண்கள் நேரேயிருந்து தெரிந்து கொள்வார்களானால், சீர்திருத்தத்திற்கு கூட்டங்கள் கூட வேண்டியதில்லை. அவர்களே சீர்திருத்த வேலையில் முன்னணியில் நிற்பார்கள். இன்னுமோர் பொருள் தங்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். நமது தொழிற் பெருமை யெல்லாம் வெளி நாட்டில் அதிகமாய்க் காணப்படுகிறதே ஒழிய நம் மூரில் நமது காலத்தை யெல்லாம் பெரும்பாலும் வீணாக்குகின்றோம். காரைக்குடியில் நடக்கும் 60,000 ரூபாய் வியாபாரத்தில் நம்மவர்கள் தொழில் எவ்வளவிருக்கிறது என்று கூர்ந்து கவனியுங்கள். (நம் மூரில் நொக்கச் செட்டான உண்டியல் கடைகள் கூட பிறரால் நடத்தப்பெறுகின்றன). நம்மூரில் தொழிற் செய்வதில் இழிவொன்றுமில்லை. வெளி நாடுகளிற் போய் வியாபாரம் செய்து சம்பாதிப்பதை விட உள்ளூர் வியாபாரத்தில் கைதேர்ந்திருப்பதே சாலச் சிறப்புடையதாகும். ஆகலால் நம்மவர்களில் பலர் உள்ளூர் வியாபாரத்தில் கவனஞ் செலுத்துவது நன்றெனக் கருதுகிறேன்.

பின்னர் திருவாளர் உ. ல. க. கண. சேவுகஞ்செட்டியாரவர்களைத் தலைவராகவும், திருவாளர் அ. க. ராம. மெ. கி. அண்ணாமலைச் செட்டியாரவர்களை உபதலைவராகவும், திருவாளர் சா. அ. ராம. ராமசாமி செட்டியாரவர்களைக் காரியதரிசியாகவும், திருவாளர் உ. நா. ராம. மெ. ராமநாதன் செட்டியாரவர்களை உப காரியதரிசியாகவும், திருவாளர் வ. சொ. ராம. ராமநாதன் செட்டியாரவர்களைப் பொக்கிஷதாரராகவும், திருவாளர் அ. மு. க. சுப்பிரமணியன் செட்டியாரவர்களைக் கணக்குப் பரிசோதகராகவும் தேர்ந்தெடுத்தார்கள்.

பின்கண்ட தீர்மானங்கள் கொண்டுவரப் பெற்று, அவை ஏகமனதுடன் அங்கீகரிக்கப்பெற நிறைவேறின:—

க. பர்மாவில் நடப்புக்கணக்கு, வங்கி வட்டிக்கணக்கு, கைமாற்றுக் கணக்குகளில் வாங்கல் கொடுக்கல் செய்வதற்கு அவ்வக்கடையார் ஒரு புத்தகம் வைத்துக்கொள்வதென்றும், பணம் கொடுப்பவர் புத்தகத்திலும் மாறி பணம் பெற்றுக்கொள்பவர் புத்தகத்திலும் ஒருவர்க்கொருவர் கையெழுத்துச் செய்துகொள்கிறதென்றும் தீர்மானிக்கப்பெற்றது.

உ. சிட்டுக்கணக்குகளுக்கு வசூல் செய்வதற்கு பொது இடங்களில் எல்லோரும் கூடாமல் அவரவர்கள் கடையில் தனித்தனியே நேரில் வசூலித்துக்கொள்ளுகிறது.

ங. இன்னார் ஆர்டருக்கு கொண்டுவர் தார் வசம் கொடுப்பது என்று வருகிற உண்டியல்கட்கு ஆட்கார் கையெழுத்தின் பேரில் பணம் பெற்றுக்கொள்ளும் கடையின் ஏஜண்டு காரண்டி கையெழுத்து செய்து வாங்கிக்கொள்கிறது.

ச. உண்டியல், வர் உண்டியல், மெமோச்சிட்டு முதலியவைகட்கு இரங்கூனில் வாங்கிவரும் ரொக்க வட்டத்தை கிறத்துவது நம்மவர்கட்கு மிகக்கௌரவமாக இருக்குமாதலால், இனி வட்டமில்லாமல் பணங் கொடுத்து வாங்கிக்கொள்கிறது.

ரு. மேற்கண்ட நான்கு தீர்மானங்களும் சாதாரண புரட்டாசி மாதம் முதல் தேதி அமுலுக்கு வரும்.

சு. நமது சங்கத்தில் தங்கள் பவர்களை இன்னும் பதிவுசெய்யாதவர்கள் அவைகளை கூடிய சீக்கிரம் பதிவு செய்து வைக்கிறது.

எ. பர்மா மாகாண மாங்கில் விசாரணைக்கம்ட்டி யாதாஸ்து முதற் புத்தகம் உ0கூ, பாரா சகை-ல் செற்று வட்டகை கடைகளெல்லாம் சிறு கடைகள், எல்லாக்கடைகளும் சங்கத்தில் அங்கத்தினராயில்லை, சிலரே சேர்ந்துள்ளார்கள் என்றெழுதப் பட்டிருப்பது தவறென்றும் அதைத் திருத்தும்படிக்கும் அக்கமிட்டியின் தலைவர்க்கு நமது சங்கத்திலிருந்துகடிதமெழுதித் திருத்தும்படிசெய்யவேண்டியது இதன் பின் நன்றியறிதல் கூறப்பட்டு இரவு அ-மணிக்குக் கூட்டம் முடிவெய்தியது.

—

## விஷப்புகையினால் கூலிகளின் மரணம்.

இரங்கூன்,

எஸ். எஸ். பராலா கப்பலில்வேலை பார்த்துவந்த மூன்று கூலிகள் விஷப் புகையினால் மரணமடைந்ததைப்பற்றி கிழக்கு சப்டிவிஷனல் மாஜிஸ்டிரேட் முன்னிலையில் விசாரணை நடைபெற்றது. வழக்கின் விபரம் வருமாறு:—

எஸ். எஸ். பராலா கப்பல் தவாயுவிலிருந்து கடந்த ஜூலை மாதம் உஎ-ந்தேதி காலை ஏ-மணிக்கு வந்து சேர்ந்தது. ஓர் பர்மிய கூலிகள் கோஷ்டியினர் கப்பலின் அடித்தட்டைத் திறந்து வேலைசெய்ய ஆரம்பித்தனர். கப்பல்தட்டில் மரப்பட்டையும் மரத்தூளும் சேகரம் செய்யப்பட்டிருந்தது மாங்சேவ திடீரெனக் கப்பல் தட்டில் விழுந்தான். இவனுக்கு நேர்ந்த விபத்தைப் பற்றி விசாரிப்பதற்கு ஞாலேய்ங், சான்மின், லாமாங் ஆகிய கூலிகள் கீழே இறங்கிச் சென்றனர்.

கடைசியில் இக் கூலிகள் அனைவரும் வெளிவராததைக் கண்டு கப்பலின் உத்தியோகஸ்தர் கவசமணிந்து கப்பலுக்குள் கீழே இறங்கினர். இவர்கள் ஸ்மரணை யற்றுக் கிடப்பதைக் கண்டு வெளியில் எடுத்துக் கொண்டு வந்தனர். செயற்கைசுவாசம்விட முயற்சிகள் செய்யப்பட்டன. லாமாங்கிற்கு பிரக்ஞை வந்தது. மற்ற அனைவரும் உயிரிழந்தனர்.

லெப்டினண்ட் கர்னல் ஓவ்ஸ் தமது வைத்திய ரிப்போர்ட்டில் "கார்பண்டி ஆக்ஸைட்" என்னும் விஷப்புகையினால் இவர்கள் உயிரிழந்ததாகக் கூறினர்.

—

## பர்மியப் பெண்ணிற்கு சிறைவாசம்.

மா கியூ என்ற 20 வயதுடைய பர்மியப்பெண் ஆகஸ்டு 26உ காலை 5—20 மணிக்கு கை விரலில் ஒரு மோதிரமணிந்து மூட்டை யொன்றை கையில் வைத்துக் கொண்டு நிற்கும் பொழுது கைது செய்யப்பட்டாள்.

இம்மாதின் அத்தை மாபாகின் வந்து சாமான்கள் யாவும் தன்னுடையதெனவும் தான் இவைகளைத்தனதுவீட்டின் படுக்கையறையில் வைத்திருந்ததாகவும் குறிப்பிட வழக்குத் தொடரப்பட்டது. வழக்கில் தொடர்ந்து விசாரணையையும் தண்டிப்பதையும் இப்பெண்ணின் அத்தை விரும்பாதபோதிலும் மூன்றாவது மாஜிஸ்டிரேட் 4 மாத கடின காவல் தண்டனை விதித்தார்.

—

## கண்டனூர்.

(நமது நிருபர்)

பெருமாள் கோவில்:— ஸ்ரீனிவாசப் பெருமாள் கோவில் தருணாலய கும்பாபிஷேகம் ஆவணி உகூஉ மிகச் சிறப்பாக நடைபெற்றது. இரவு கருடசேவையும் சிறப்பாக நடந்தது. உள்ளூர் வாலண்டியர் ஜனங்களுக்கு உதவி செய்தனர். இவ்வருஷம்முதல் பெருமாள், காலையில் சிவன் கோவிலுக்குப் பக்கத்தில் அமைக்கப் பெறும் கொட்டகைக்கு எழுந்தருளி மாலையில் சிவன் கோவில் சுவாமியுடன் அம்புபோடச் செல்வார்.

—

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி மு கோர்ட்டு

S. C. No 998 of 29.

பி கி பி அளகப்பசெட்டியார்—வாதி

சிவக்ஞானமாசாரி—பிரதிவாதி

நீர் ஷை வாதியின் பாத்திரக்கடையில் வேலைசெய்து வந்த வகையில் கொடுக்கவேண்டிய ரூ 150-0-0க்கு எழுதிக்கொடுத்திருக்கும் பிராமிசேரி கோட்டுப்படி வியாஜ்யம் செய்து 30-9-30உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை வாய்தாவன்று நீர் 10½ மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகி உம்முடைய எதிர்வாதத்தைத்தெரிவித்துக் கொள்ளவும். தவறினால் உம்மை எக்ஸ் பார்ட்டி தீர்ப்புச் செய்யப்படுமென்பதை இதன் மூலம் உமக்கு கண்டிப்பாய் அறிவித்திருக்கிறது.

T. G. நாகரெத்தின சாஸ்திரி, வக்கீல்,
தேவகோட்டை,
23-9-1930. { 130





## மோட்டார் செய்தி.

### "குட் ஈயரின்" புதுத் தொழிற்சாலை

குட் ஈயர் கம்பனி தென்னமேரிக்காவிலுள்ள அர்ஜன்டைனில் ஓர் கிளை நிலையம் ஸ்தாபித்துள்ளது. அதில் குட் ஈயர் டையரும் ட்யூபுகளும் செய்யப்படும். அந் நிலையத்திற்கு அர்ஜன்டைன் குட் ஈயர் கம்பனி என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அதற்கான கட்டிடங்கள் ஜூலை முதற் தேதியில் கட்டத்தொடங்கி பப்பிரவரியில் டையர் வேலை தொடங்கும். இந்த நிலையம் தினமும் ஆயிரம் டையரும் 1000 ட்யூபும் செய்யுமாம். சுமார் 400 வேலைக்காரர்கள் இதில் வைக்கப்படுவார்கள். அர்ஜன்டையின் தொழிற்சாலை குட் ஈயரின் 5-வது நிலையமாகும். இப்போது கானடாவில் இரண்டும் இங்கிலாந்தில் ஒன்றும் ஆஸ்திரேலியாவில் ஒன்றுமிருக்கின்றன. இத் தொழிற்சாலைகளில் டையருக்கான துணி வேலைகள் நடப்பதோடு அணித்தான பல தேசங்களில் ரப்பர் கிருஷியும் பருத்திக் கிருஷியும் நடைபெறுகிறது. குட் ஈயர் கம்பனி ஆகாய விமானத் தொழிற் சாலைகளும் அவைகள் தங்குவதற்கான இடங்களும் அமைக்கின்றது.

### 26 செக்கண்டில் ஒரு மைல் பாய்ச்சல்.

ஹீனி என்ற ஜர்மனியர் B. M. W. மோட்டார் சைக்கிளில் ஒரு மைல் தூரத்தை 26 செக்கண்டில் கடந்து விட்டார். இது உலகில் முன்னெவரும் பிரயாணம் செய்யாத வேகமாம்.

### மோட்டார் திருடர்கள்.

செப்டம்பர் இருபதாந் தேதிக்குச் சமீபம் இரண்டு மோட்டார் திருடர்கள் மிட்லண்டு—ஸ்காட்டிஷ் ரயில்வே ஸ்டேஷனுக்குள் இரவு 12 மணிக்குத் திடீரெனப் புகுந்து இரண்டு குமாஸ்தாக்களை துப்பாக்கியால் பயப்படுத்தி அன்று பிரிவு செய்தவைத்திருந்த பணம் முழுவதையும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். மறுநாள் காலையில் அவர்கள் தாங்கள் ஏறி வந்த மோட்டாரை ஒரு மைலுக்கப்பால் போட்டுவிட்டுப் போயிருப்பதாகத் தெரிந்தது.

கிளாஸ்கோவில் ஒரு டிராம் உத்தியோகஸ்தர் தம் தின வருமானத்தை பெட்டிக்குள் வைத்துப் பூட்டிக்கொண்டிருக்கும்போது யாரோ ஒருவர் தலையிலடிப்பதாய் உணர்ந்தார், உடன் திரும்பிப்பார்க்க அடித்தவர் தன் கையில் கிடைத்த எட்டுப் பவுனைக் கொண்டு மறைந்துவிட்டார்.

—

### இந்தியா இங்கிலாந்துத் தந்திப் போக்குவரத்து.

#### கட்டணத்தில் குறைவு.

தென்னாப்பிரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் நடைபெறும் தந்திப்போக்குவரத்துக்கும், கம்பியில்லாத் தந்திக்கும் ஒரேவிதமான கட்டணம் அக்டோபர் முதல் தேதி முதல் ஏற்படுத்தவதென ஏகாதிபத்தியப் போக்குவரத்துக் கம்பெனியார் அறிவித்திருக்கின்றனர். அஃதுடன் இந்தியா சம்பந்தப்பட்டவரையிலும் இவ்விதமே சமமாகச் செய்துவிட உத்தேசித்திருப்பதாகவும், இதுசம்பந்தமாக இந்தியா கவர்ன்மெண்டுடன் ஒப்பந்தம் செய்து கொண்டதும் தந்தியில் வார்த்தைக்கு நான்கு பென்ஸ்கள் விகிதம் குறையக்கூடுமென்றும் அக் கம்பெனியார் அறிவித்திருக்கின்றனர்

### தென்னாபிரிக்காவுக்கு ஆகாயவிமானத் தபால்

கேப்டவுனுக்கும் (தென் ஆப்பிரிக்கா) லண்டனுக்கும் ஏற்படுத்தவதென்றபோடப்பட்டிருந்த ஆகாயவிமானத் தபால் திட்டத்தை அரசாங்கம் ஒப்புக்கொண்டு விட்டது. வருகிற ஜனவரியில் அதன் ஓர் பகுதி அஃதாவது விக்டோரியா தடாகத்திற்கும் இங்கிலாந்திற்கு முள்ள போக்குவரவு, தொடங்கப்படும்.

### குரங்கினால் கொல்லப்பட்ட மனிதன்.

அல்ஜியர்ஸ் என்ற இடத்தில் இருகுரங்கு கூட்டங்களுக்குள் ஓர் கடும்போர் நடந்து கொண்டிருக்கும்போது ஒரு குரங்கு கோபத்துடன் எறிந்த கல்லொன்று அருகில் வண்டியில் போய்க்கொண்டிருந்த ஒருவர்மீது விழுந்து அவர் உயிர் துறந்தார்.

## கடிதங்கள்.

### உண்மைவிளக்க நிலையம்.

(காச்சியார்புரம்)

பகுத்தறிவுக்கழகம்:— இத்திங்கள் 2-ம் நாள் இக்கழகக் கூட்டம் வழக்கம்போல் கூடிற்று. இதற்கு உயர் திரு. ப. சிவானந்தம் அவர்கள் தலைமைவகித்தார்கள். அவ்வமயம் திரு. கனிமொழி என்னும் மாணவி செய்யுள் ஒப்பித்தாள். திரு. அழகப்பன்என்னும் மாணவன் வாசகசாலையின் பயன் என்பது பற்றிப்பேசினான். அதற்குப் பிறகு உறுப்பினர்களொவ்வொருவரும் தத்தம் கருத்துக்களை வெளியிட்டனர். பின் தலைவரவர்கள் நீண்டதோர் சொற்பெருக்கிட்டார்கள். அமைச்சர் தலைவர்களுக்கும் நன்றி கூறக் கூட்டம் இனிது கலைந்தது என கழக அமைச்சர் அறிவிக்கிறார்.

### புதுவயல்.

ஸ்ரீ சரஸ்வதிசங்கம்:—இச்சங்கத்தின் எட்டாவதாண்டு ஐந்தாவது மாதக்கூட்டம் சாதாரண பிரமோதூத ஆண்டு புரட்டாசித்திங்கள் உம் நாள் மாலை 5 மணிக்குமேல் திருவாளர். எம். ஸ்ரீநிவாஸாச்சாரியார் அவர்கள்தலைமையில்கூட்டப்பெற்றது. முறையே கடவுள் மாணிக்கவாசகர் குருபக்தி யென்ற விடயங்களை திரு. இராஜகோபாலன் சங்கமேஸ்வரன் வீர. இராமசாமி ஆகியவர்கள் பேசிய பின் சா. சிதம்பரம் செட்டியாரால் வந்தனம் கூறப்பெற்று சபை நன்கு நிறைவெய்தியது வென காரியதரிசி அறிவிக்கிறார்.

## சேவல் முட்டையிட்டது.

ஆண் பெண்ணாகவும் பெண் ஆணாகவும் மாறும் அதிசயம் அடிக்கடி காணப்படுகின்றது. சமீபத்தில் டாக்டர் R. A. மாக்கென்ஸ் என்பவரும் டாக்டர் வாட்டனும் (லண்டன்) ஜேர்னல் அப் ஹெரிடிட்டி என்ற பத்திரிகையில் ஒரு பெட்டைக் கோழி சேவலாக மாறினதையும் அச்சேவல் மீண்டும் பெட்டையாக மாறிப் போனதையும்பற்றி எழுதியிருக்கின்றார்கள்.

1925 மார்ச்மாதத்தில் ஒரு வீட்டில் எட்டுக்கோழிக்குஞ்சுகள் பொரித்தன. அவ்வெட்டுகுஞ்சுகளும் ஒழுங்காய் வளர்ந்தவரவே 8 வது மாதத்தில் முட்டையிட ஆரம்பித்தன. அவற்றை வளர்ப்போர் சந்தோஷத்துடன் முட்டைகளைப் பெற்றுவந்தார்கள். முட்டையிட்டானதும் கோழிகள் சிறிது நாட்கள் அடைகாத்துவிட்டு மீண்டும் முழுமையடைந்து முட்டையிடத் தொடங்கின. அப்போது ஒன்றுமட்டிலும் முட்டை இடவில்லை. சுமார் 6 மாதம் சும்மாயிருந்துவிட்டு அப்பால் சிறிது சிறிதாக மாற்றமெய்தி ஆறுமாதக் கடைசியில் சேவலாக மாறிற்று. 1927 வருடத் தொடக்கத்தில் யாதொரு குறையுமற்ற சேவலேயாகி முன்வளர்ந்து கொண்டைதோன்றி பெட்டைகளுடன் மேயத்தொடங்கிற்று. முட்டையிடவேயில்லை. என்றாலும் அதனைப் பரிசோதிக்க எண்ணி வளர்த்தவர் 12 முட்டைகளை அடைகாக்கும்படி வைத்தார். அச்சேவல் யாதும் வருத்தமின்றி அடைகாத்து 11குஞ்சுகளை பொரித்தது. பின்அதே வருஷத்தில் சேவலானவுடனே முட்டையிட்டது. அம்முட்டைகள் ஒவ்வொன்றும் இரட்டையாயிருந்தன. இவ்விஷயத்தை பரிசோதிக்க எண்ணி அதனைக் கொன்று கருப்பை முதலியவற்றைச் சோதித்தனர். யாதொரு விசேஷமும் காணப்படவில்லை.

ஜேர்னல் அப்ஹெரிடிட்டி ஆசிரியர் இதனைப்பற்றி எழுதுகையில் இத்தகைய சம்பவம் ஒன்று இரண்டொருவருஷங்கட்கு முன்நடந்ததென்றும் ஒரு பெட்டைக்கோழி சேவலுருவமடைந்து சேவலாகவேயிருந்து முட்டையிட்டதென்றும் குறிப்பிடுகின்றனர்.

## இரக்ஷண்யசேனை.

### லண்டனில் நவம்பர் மாதத்தில் கூடும்.

உலகின் பல பாகங்களையும் சேர்ந்த ரக்ஷண்ய சேனைக் கமிஷனர்களின் மகாநாடொன்று லண்டனில் நவம்பர் மாதத்தில் கூடப் போகிறது. சேனையின் வேலைகளைத் தீவிரமாக நடத்துவதில் ஜெனரல் ஹிக்கின்ஸுக்கு விசேஷப் பக்கபலமுண்டு பண்ணுவதே இம் மகாநாட்டின் உத்தேசமாகும். ஐக்கிய நாட்டில் ரக்ஷண்ய சேனையின் தலைவரான கமாண்டர் ஈவாஞ்ஜிலின் பூத் மகாநாட்டிற்கு வரக்கூடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## திருவாங்கூர் செய்தி.

### புதிய போலீசார்.

19 தேதியும் 18 தேதியுமாக போலீஸ் கமிஷனர் 92 பேர்களை சிபாய்களாக எடுத்திருக்கின்றார்.

### ஓணத்துக்குபின்

ஓணக் கொண்டாட்டத்தை முன்னிட்டு மூடப்பெற்ற பள்ளிக்கூடங்கள் 20 தேதி முதல் திறக்கப்பட்டு விட்டது.

### திருவட்டாற்றில் ஆஸ்பத்திரி.

திருவட்டாற்றில் கடந்த 15 தேதி முதல் ஒரு வில்லேஜ் ஆஸ்பத்திரி திறந்திருக்கிறார்கள்.

### அம்மை வியாதியின் கொடுமை.

அம்மை நோய் சற்று கூடி வருகின்றது. 13-ந் தேதியோடு முடிந்த வாரத்தில் மொத்தம் 13 பேரிறந்திருக்கின்றார்கள்.

### உப்பு விலை.

மகாராணியின் உத்தரவினால் திருவாங்கூரிலேயே விளைவிக்கப்படும் உப்பு (திருவனந்தபுரத்தில் ஒரு மணங்கு விலை 2 ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது

### ராமகிருஷ்ண குக்கிலியா ரஜா.

இங்கிலீஷ் பாடசாலை இன்ஸ்பெக்டர் திரு. பு. ராமகிருஷ்ண குக்கிலியா பென்ஷன் பெறுவதற்கு ஆரம்பமாக 19 தேதி ரஜாவில் போனார்.

### வியாபாரிகள் கூட்டம்.

செப் 14 தேதி திருவனந்தபுரம் சாலை வியாபாரிகளின் கூட்டம் ஒன்று செந்தமிழ் பாடசாலையில் நடைபெற்றது. ஜில்லாக் கோர்ட்டு வக்கீல் திரு K. S. நாராயண ஐயர் அக்கிராசனம் வகித்தார். வியாபார அபிவிருத்தியைப் பற்றியோசிக்கப்பட்டது.

### பெரு மழை.

மத்திய திருவாங்கூரில் கடந்த 10 நாட்களாக பலத்த மழை பெய்துகொண்டிருக்கின்றது. தலவாடி, திருவல்லா முதலிய இடங்களில் கன்னிக்கிருஷி மழைப் பெருக்கினால் அழிந்துவிட்டது.

### ஜென்மி குடியான் மசோதா.

இப்போது சட்ட நிருபண சபையின் ஆலோசனையிலிருந்து வரும் ஜன்மி குடியான் மசோதாவை ஆக்ஷேபித்து பல திருவாங்கூர் ஜன்மிகள் ஒரு பெரும் விண்ணப்பமொன்று சர்க்காருக்கு அனுப்பியிருக்கின்றார்கள்.

### எஸ். என். டி. பி. யோகம அணவர் கூட்டம்.

கடந்த ஞாயிற்றுக்கிழமை 4-30 க்கு திருவனந்தபுரம் கைதமுக்கில் எஸ். என். டி. பி. யோகமாணவர் சங்கத்தின் முதற்கூட்டம் நடைபெற்றது. திரு. கே. ஆர். நாராயணன் பி. ஏ. பி. எல். தலைமைவகித்தார்.

### மாடன்கோவில் கட்ட முயற்சி.

திருவனந்தபுரம் மைதானத்திலிருக்கும் மாடன் கோவிலை அங்கிருந்து மாற்றி வேறோரிடத்திலமைப்பதற்கு அரசாங்கம் ஆயிரம்ரூபாய் செலவுசெய்ய எண்ணியிருக்கின்றது. கட்டிடவேலையைஅரசாங்க மராமத்து இலாகாதார் செய்து முடிப்பர்.

### இந்தியக் கிருஸ்தவர் மகாநாடு.

தென் திருவாங்கூர் இந்தியக் கிருஸ்தவ மகாநாடு அக்டோபர் ஒன்று, இரண்டு தேதிகளில் நாகர் கோவிலில் நடைபெறும். ஹைக்கோர்ட்டு மாஜி ஜட்ஜ் திரு எம். டி. தேவதாஸ் தலைமை வகிப்பார். ஒரு மாணவர் மகாநாடும், பெண்கள் மகாநாடும் அதோடு நடைபெறும்.

### இந்துமுஸ்லீம் சண்டை.

கடந்த வியாழனன்று திருவனந்தபுரம் மணக்காட்டில் ஒரு கலகம் நடந்தது. இறந்துபோன ஒரு முஸ்லீமினுடைய தர்க்கத்தை விசாரித்து சில இந்துக்களும் கிருஸ்தவர்களும் மசூதிக்குள் புகுந்தது முஸ்லீம்களுக்குப் பிடிக்கவில்லையாம். இதுவே மேற்படி கலகத்திற்குக்காரணமென்று சொல்லப்படுகின்றது.

### "ஸ்ரீமதி"யின் இட மாற்றம்.

கோட்டயத்தில் வக்கீல் வேலை பார்த்து வந்த அன்னசாண்டி எம். ஏ. பி. எல், திரு

## இலங்கைச் செய்தி.

### பிழைப்பற்றோருக்கு உதவி புரிய முயற்சி.

**ரேவரேண்ட் மேதரின் போதக்கடிதம்**

கொழும்பு, வென்ரோயன் ஸ்டிரீட் 1-ம் நம்பர் வீட்டில் வசிக்கும் ரெவரெண்ட. ஜே. எஸ் மேதர், 16உ யன்று கீழ்க்கண்ட கடிதத்தைப் பத்திரிகைகளுக்கு எழுதியிருக்கிறார்:—

வேலையில்லாமலிருப்பவர்களின் விபரத்தைக் கண்டு பிடிப்பதற்காக, நாங்கள் ஓர் அச்சுப்பாரம் தயாரித்து, வேலையில்லாமலிருப்போர் அவற்றை நிரப்பி அனுப்பும்படி ஏற்பாடு செய்தோம் வேலையில்லாமலிருக்கும் பலர் இப்பாரங்களை நிரப்பியனுப்பியிருக்கின்றனர் இவைகளிலிருந்து, லைசன்ஸ் பெற்ற மோட்டார் ஓட்டிகள் ஆங்கில முறைப்படி கணக்கெழுதத் தெரிந்தவர்கள், டைப் அடிப்பவர்கள், கிளார்க்குகள், ஓடாவிகள், மேசன்கள், ஆகிய பல்வேறு தொழில் செய்பவர்கள் வேலையில்லாமல் கஷ்டப்படுவதாகத் தெரியவருகிறது. இவர்கள் தங்களுக்கு என்னவேலை கொடுத்தாலும் செய்யத் தயாராயிருப்பதாகத் தெரிவிக்கின்றனர்.

ஆதலால், வேலைக்கு ஆட்கள் தேவைப்படுகிறவர்கள் அன்பு கூர்ந்து எனக்கு அறிவிப்பின், நான் நல்லவேலைக்காரர்களென்று சிபார்சு செய்யக்கூடும்.

### பூசோலியின் புதல்வியின் விஜயம்.

செப்டம்பர் 26 தேதி இத்தாலியா அதிகாரியின் முதல்புதல்வி திரு மியானே இலங்கைக்கு விஜயம் செய்வார். அவரோடு அவர் கணவரும் வருவார். அவர்கள் ஷாங்காய்க்குப் புறப்படுவார்களென்று தெரிகிறது.

### இலங்கைக்குப் பிரயாணம்.

பெல்ஜியம் பாங்கிக் கவர்னர் மிஸ்டர் எம். ப்ராங்கு என்பவர் பிரஸெல்ஸிலிருந்து செப்டம்பர் மாதக்கடைசியில் பிரயாணப்பட்டு இலங்கைக்கு வருவார். அங்கு நடைமுறையிலிருக்கும் வங்கித் தொழிலை கற்றுக்கொள்ள வேண்டுமென்பது அவரது அவா.

### காலியில் காய்கனிவர்க்க விற்பனை ஏற்பாடு.

தென் மாகாணத்தில் பல பகுதிகளிலும் உள்ள அரசாங்க தோட்டச்செய்கை ஸ்தாபனங்களில் பெறப்படும் காய்கனிவர்க்கப் பொருள்களை வைத்து விற்பனை செய்வதற்காக காலியில் ஒரு பிரத்தியேகமான இடம் ஏற்படுத்தப்பட்டுளது. கத்தரி, வெண்டைக்காய், பூசினி வெள்ளரி முதலிய காய் வகைகளும், அன்னாசி தேன் பப்பாளி, வாழை முதலிய கனிவகைகளும் ஏராளமாக வந்து குவிகின்றன. சனிக்கிழமை தோறும் விற்பனை நடைபெறுகிறது. நகரவாசிகள் இதுபற்றி பெருமகிழ்ச்சி யடைந்திருக்கின்றனர்.

— —

வனந்தபுரத்திற்குத் தன் ஜாகையை மாற்றி அங்கு ஹைகோர்ட்டில் வேலை பார்த்து வருகிறார். அவர் ஆசிரியையாக விருந்து வரும் ஸ்ரீமதி என்ற ஆங்கில மலையாளப் பத்திரிகையும் திருவனந்தபுரத்திற்கு மாற்றப்பட்டிருக்கிறது.

### அரசர் வருகை.

மகாராஜா பங்களூரைவிட்டு 21 தேதி புறப்பட்டு 26 தேதி திருவனந்தபுரத்தை அடைவாரென்று எதிர்பார்க்கப் படுகின்றது.

### ஆபீஸ் மாற்றம்.

தென் மராமத்து எக்ஸிகியூடிவ் எஞ்சினீயரின் ஆபீஸ் பத்மநாப புரத்திலிருந்து நாகர்கோவிலுக்கு மாற்றப்பட்டிருக்கின்றது.

### அகிலகேரள சாகித்ய மகாநாடு.

செப் 17 தேதி கொல்லத்தில் திரு. கருணாகரன் மேனோன் B. A. B. L.—ன் தலைமையில் கூடிய ஓர் கூட்டத்தில் அடுத்த அகிலகேரள சாகித்ய மகாநாடு கொல்லத்தில கூட்ட வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டு அதற்கு வரவேற்புக்கமிட்டியொன்று நியமிக்கப்பட்டது.

— —









## பிரைவேட் விளம்பரம்

புதுக்கோட்டை சமஸ்தானம் திருமயம் தாலூகா அரிமழம் வட்டம் அரிமழத்திலிருக்கும் வெ. லெ. லெட்சமணஞ் செட்டியார் குமாரர்கள் வெ. லெ. செல்லப்பன் என்ற சோமசுந்தரஞ் செட்டியார் 1 மேற்படி காசி விஸ்வனுதன் செட்டியார் 2, ஆகிய நாங்கள் இருவரும் இதனுல் சகலமான பேர்களுக்கும் தெரிவித்துக்கொள்வது யாதெனில்:—

அரிமழம் வெள்ளையஞ் செட்டியாரவர்கள் மகன் வெ. லெ. லெட்சுமணஞ் செட்டியாராகிய எங்கள் தகப்பனுருக்கு இப்போது வயது 60 ஆகிறது; அவர் குடும்ப காரியங்களை போதுமானபடி தலைமைவகித்துப் பரிபாலிக்க முடியாத நிலைமையிலிருப்பதோடும் எவர் எதைச் சொன்னுலும் அதைக் கேட்டு நடக்கும் தன்மையறுகவுமிருக்கிறார். அவ்விதமுடையவர் இப்பொழுது ஏதோ சிலருடைய துர்போதனைக்கு உள்ப்பட்டு குடும்ப விருத்திக்கிடையூரானதும் தன்னுடைய திரேக சம்பந்தமானதும் இங்கு பிரசுரஞ் செய்ய அர்கதையல்லாததுமான காரணங்களை முன்னிட்டும் எங்கள் சம்மதியைப் பெருமலும் மனுேசியை மதிக்காமலும் ஸ்தாவர ஜங்கம சொத்துக்களை விற்றிருப்பதாயும் விற்கப்போவதாயும் தெரிகிறது. அவ்வாறு செய்திருக்கின்றனவும் செய்யப்போவதாயும் கேள்விப்படுகின்ற மேற்கூறிய காரியங்கள் குடும்ப முன்னேற்றத்திற்குகந்த காரியங்களாகாவென்பது சகலரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. மேலும் எங்கள் "ஸ்தாவர ஜங்கம" சொத்துக்கள் அனைத்தும் பூர்வீக பிதுராஜ்ய சொத்துக்களேயொழிய அவரது சுயாஜ்ய சொத்துகளல்ல. ஆகையால் அவருக்கு இந்தக் குடும்பசம்பந்தமாகவோ, அல்லது பர்மா மாகாணத்தில் அரிக்கனில் இருக்கும் எங்கள் பொதுக்கடை வெ. லெ. "லெட்சுமணஞ் செட்டியார்" என்ற மார்க்காவுக்கோ அவர் அவர் பெற்ற மேற்படி கடைக்கூட்டாளி "மெய்யப்பசெட்டியார்" என்பவருக்கோ எவ்வித கடன் கொடுத்திருந்தாலும் இனிக்கொடுத்தாலும் அவர்களிடம் எங்கள் பொதுக் குடும்ப சம்பந்தமானதும், அரிக்கன்கடை சம்மந்தமுமான "ஸ்தாவர ஜங்கம" சொத்துக்களை ஈடு ஒத்தி, கிரயம், மெமோவர் முதலிய "பாதீனங்கள்" பெற்றிருந்தாலும் இனிப்பெற்றுலும் அவைகள் இக்நாட்டிலுள்ளதும் எங்கள் அரிக்கன்கடை சம்மந்த முள்ளதுமாகிய எங்களுக்குச் சொந்தமான சொத்துக்களையோ பொருளையோ அன்றி இதர வஸ்துக்களையோ எங்களையோ கட்டுப்படுத்தாது என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

வெ. லெ. செல்லப்பன் என்ற சோமசுந்தரஞ் செட்டியார்.

வெ. லெ. காசி விஸ்வனுதன் செட்டியார்.

26—8—30

— —

# வேலையில்லாத் திண்டாட்டம்.

## உலகெங்கும் தத்தளிப்பு.

### ஜப்பானில் பசியால் மயக்கம்.

வேலையில்லாத் திண்டாட்டத்தினால் பாதிக்கப்படாத நாடு ஒன்றுகூட இல்லையென்று சொல்லவேண்டும். அரசாங்கங்கள் பெருந்தொல்லைக்குள்ளாகி யிருக்கின்றன. மந்திரிசபைகளின் பலதிறப்பட்ட முயற்சிகள் பலனற்றுப் போகின்றன. உலகத்தில் பல நாடுகளிலுள்ள "டெய்லி ஹெரால்ட்" நிருபர்கள் வேலையில்லாத் திண்டாட்ட சம்பந்தமாய்த் திரட்டியிருக்கும் புள்ளி விபரங்கள் முதலியன வருமாறு:—

**ஜெர்மனி.**

ஜெர்மனியின் பணமுடை சொல்லத்தரமன்று. ஜூலை மீ 1ம் உயில், ஜெர்மனியில் சுமார் 2,757,000 பேர்கள் வேலையற்றிருந்தனர். இவர்களில் சுமார் 1,900,000 பேர்கள், ஒருவருடத்துக்கு முன்பிருந்தே, வேலையற்றோர் இன்ஷூரன்ஸ் நிதியிலிருந்து, சம்பளம் பெற்றுவந்தனர். கோடைகாலம் முடிந்ததும், வேலையற்றோர் தொகை அதிகரிக்குமென்று கருதப்படுகிறது. 1929 மே மாதத்தில் 1,421,000 டன் உருக்கு உற்பத்தி செய்யப்பட்டது. 1930ம் வருஷம் அதேமாதத்தில் 1,034,000 டன்கள் மாத்திரம் உற்பத்தி செய்யப்பட்டன. 1929 ஏப்ரல் மாதத்தில், 13,410,000 டன் கிலக்கரி தோண்டி யெடுக்கப்பட்டது. 1930ம் வருஷம் அதேமாதத்தில், 11,480,000 டன்கள் மாத்திரம் எடுக்கப்பட்டன. ரூர்பிரதேசத்தில், சுரங்கத்தொழிலாளர் வேலையற்றிருந்தவர் தொகை மே மாதம் 942,000 ஆகிவிட்டது.

**இத்தாலி.**

சென்ற வருஷத்தைவிட இந்த வருஷத்தில் வேலைப்பஞ்சம் அதிகமாயிருக்குமெனத் தோன்றுகிறது. 1929 டிசம்பர் மாதக் கடைசியில் பாஸிஸ்ட் தொழிலாளர் சங்க ரெஜிஸ்டர்களில் பதிவாயிருந்த 3,093,005 தொழிலாளரில் 408,748 பேர்கள் பூராவாய் வேலையற்றிருந்தனர். இவர்களுக்கு அரசாங்கத்தாரால் பணஉதவி செய்யப்பட்டது.

**ஆஸ்ட்ரேலியா.**

ஆஸ்ட்ரேலியாவில் வேலைப்பஞ்சம், அளவுக்கு மீறிவிட்டதாகத் தெரிகிறது. தொழிலாளர் சங்கங்களைச்சேர்ந்தவர்களில் நூற்றுக்கு 13 பேர் விகிதம் தொழிலற்றிருக்கின்றனர். நீங்கலாக சுமார் 150,000 பேர் வேலையில்லாதிருப்பதாய் மதிப்பிடப்படுகிறது. ஆஸ்ட்ரேலியாவின் வேலைப்பஞ்சத்திற்கு, உலகத்திற்குப் பொதுப்படையான காரணங்கள் நீங்கலாக சில விசேஷகாரணம் மழைப்பஞ்சமும் அப்பால் பெருமழையும் கோதுமை, ஆட்டு உரோமம், ஆட்டு மந்தைகள், பழவர்க்கங்கள், ஆகிய ஜீவாதாரத் தொழிற்றுறைகள், பெருவாரி சேதமடைந்து விட்டதுமாம். நியூ சவுத்வேல்ஸிலும், குயின்ஸ்லாந்திலும், கவர்ன்மெண்ட் சில தொழில்களை ஸ்தாபித்து, சொற்பச் சம்பளத்தில் 8,000 பேருக்கு வேலை கொடுத்திருக்கிறது. ஆஸ்ட்ரேலியா கவர்ன்மெண்ட் மொத்தத்தில் வேலையற்றிருப்போர் உபகாரச் சம்பளத்திற்கென்று, வருஷத்திற்கு 2,000,000 பவுன்கள் செலவு செய்கிறது.

**தேன் ஆப்பிரிக்கா.**

கல்வியில் தாழ்வாகவிருப்பதால், சிறுவர் சிறுமிகளுக்கு வேலை தேடிக்கொடுத்தல் சிரமமாயிருக்கிறதென்று அதிகாரிகள் புகார் செய்கின்றனர். வர்த்தகத்தாழ்ச்சி, யூனியன் கவர்ன்மெண்டை வாட்டுகிறது. பொதுவாகக் கூறுமிடத்து, தென் ஆப்பிரிக்காவின் தற்கால செல்வநிலை, ஆஸ்டிரேலியாவைவிட உரமானது. தேர்ச்சியடைந்த பல தொழிலாளர், அரசாங்கத் தொழிற் காரியாலயத்தில், வேலைகளுக்காகத் தமது பெயர்களைப் பதிவு செய்கின்றனர். முன்னர், இத்தகையோர்கள் பதிவு செய்வதில்லை. கூலிப்பிழைப்பு முதலிய சில்லரை வேலை செய்பவர்கள் மாத்திரமே பதிவு செய்வர். தென் ஆப்பிரிக்கா யூனியனுக்குள், சுமார் 20,000 ஐரோப்பியத் தொழிலாளர் வேலையற்றிருப்பதாய் மதிப்பிடப்படுகிறது. சுரங்கங்களில் வேலை செய்யும் ஐரோப்பியரைக் குறைக்கப்போவதாய் எழுந்துள்ள வதந்தியினால் பெரும் பீதி ஏற்பட்டிருக்கிறது. சுதேசிகளுள் எத்தனைபேர் வேலையில்லாதிருக்கின்றனர் என்று கணக்கெடுக்கப்படவில்லை. ஆனால், பெருந்தொகையானவர்கள் வேலையற்றிருக்கின்றனர் என்பதில் சந்தேகமேயில்லை.

**ஜப்பான்.**

ஆரம்பப் பாடசாலைகளில் படிக்கும் பிள்ளைகள், பசியினால், பாடசாலைகளிலேயே மயங்கி விழுந்து விடுவதாகப் பத்திரிகைகளில் அடிக்கடி வெளிவருகின்றன. இதிலிருந்து நாட்டின் கஷ்ட ஸ்திதியை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

**உலகமெங்கும் வேலைப்பஞ்சம்.**

இதுவரை 372,000 தொழிலாளர் வேலையற்றிருப்பதாய் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது. இது நீங்கலாக நகரங்களில் வேலைசெய்துவந்த சுமார் 200,000 பேர்பிழைப்பின்றி, தமது ஊர்களுக்கு ஒடிப்போயிருக்கின்றனர். அரசியல் எதிர்கக்ஷியார், 1,000,000 தொழிலாளர் வேலையில்லா திருப்பதாய் மதிப்பிடுகின்றனர். சரியான தொகையைக் கண்டுபிடிக்க முடியாதிருக்கிறது. கையிருப்புச் சரக்கு, மூன்றுமடங்கு அதிகப்பட்டு விட்டபடியால், பஞ்சுத்தொழிற்சாலைகள் கஷ்டத்திற்குள்ளாகி யிருக்கின்றன. பல தொழிற்சாலைகள் இரவு வேலை செய்வதை நிறுத்திவிட்டன. ஆகவே, உற்பத்தி நூற்றுக்கு 30 விகிதம் குறைந்து, 18,000 பேர் பூராவேலையிழந்து விட்டனர். 200,00 பேர் அரைகுறையாய் வேலை செய்துவருகின்றனர்.

**பிரான்சு.**

833 பேர்களே வேலையற்றிருப்பதாய் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது. தேவைப்படும் பொழுது நாட்டின் கைத்தொழில்களுக்கு புத்துயிர் அளிப்பதற்காக 40,000,000 பவுன்கள் செலவிடக் கோரிக்கை செய்யப்படுகிறது.

**பெல்ஜியம்.**

தற்கால பெல்ஜியத்தில், முழுநேரம் வேலையற்றவர்கள் 12,000 பேரும், அரைகுறை நேரம் வேலைசெய்பவர்கள் 40,000 பேரும் இருக்கின்றனர். கண்ணாடி, சிமந்தி உலோகம், நெசவு, ஆகிய தொழிற்கள், வர்த்தகத் தாழ்ச்சியினால் வாடுகின்றன.

**கனடா.**

கனடாவில், பலத்த பண நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. இதற்குள்ள காரணங்கள் இரண்டு. ஒன்றுஸ்டாக் மார்க்கேட் முறிவு, மற்றொன்று கனடாவில் விளையும் கோதுமை விற்கமுடியா திருப்பது. ஜூலை மாதத்தில் மாண்ட்ரீயலில், ரெஜிஸ்டர் செய்யப்பட்ட தொழிலற்றோர் தொகை 5000. இத்தொகை இந்நகர மொத்த ஜனத்தொகையில் நூற்றுக்கு ⅞ விகிதமாகிறது. கோதுமை வளரும் எல்லா நாடுகளிலும், விளைவு அதிகமாயிருக்கும் பக்ஷத்தில் கனடாவின் நிலைமை கஷ்டத்திற்குள்ளாகிவிடும்.

**போலண்ட்.**

போலண்டில் இன்ஷூர் செய்யப்பட்டிருக்கும் மொத்தத் தொழிலாளர் 1,006,996. இவர்களில் மே மீ கடைசியில் 228,331 பேர் வேலையற்றிருப்பதாய் ரெஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றனர். கைத்தொழிற் சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளருள் நூற்றுக்கு 20 விகிதத்திற்கு அதிகமானவர்கள் பண நெருக்கடியின் காரணமாக வேலையிழந்து விட்டனர். இதனால் முதல் மந்திரி மார்ஷல்பில்சுட்ஸ்கிக்கு ஏற்பட்டிருக்கும் கஷ்டம் சொல்லத்தரமன்று. மீதியாயிருக்கும் 778,000 தொழிலாளரின் சுமார் கால் பங்குப்பேர் அரைகுறை நேரமே வேலை செய்கின்றனர். ஜூலை மீ 10 ம் தேதி வெளியான கவர்ன்மெண்ட் அறிக்கையிலிருந்து வேலையற்றிருப்போர் தொகை குறைந்திருப்பதாகத் தெரிகிறது. நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களில் பாதிப்பேர் அரைகுறை நேரம்தான் வேலை செய்கின்றனர். இப்பொழுது 202,902 பேர் வேலையற்றிருப்பதாய் ரெஜிஸ்டர் காட்டுகிறது. இது உத்தியோக தோரணையான விபரம். ஆனால் உண்மையில் இதைவிட அதிகப்பேர் பிழைப்பில்லாதிருக்கின்றனர்.

**அமெரிக்கா.**

அமெரிக்காவில் வேலையற்றிருப்போரைச் சரிவரக்கணக்கெடுப்பதானால், சுமார் 5,000,000 போருமென்று அயோவா நகரத்திலிருக்கும் புரபஸர் சார்ல்ஸ் இ' பார்சன்ஸ் கூறுகிறார்.

**கிரேட்பிரிட்டன்.**

கிரேட்பிரிட்டனில் வேலையற்றிருப்போர் தொகை 20 லக்ஷத்துக்கு மேற்பட்டு விட்டது. இதைக் குறைப்பதற்கு தற்போதைய கவர்ன்மெண்ட் பற்பல முயற்சிகள் செய்கின்றன. ஆனால் வேலையற்றிருப்போர் தொகை குறைந்த பாடில்லை.

—

**விருதுநகர்.**

விருதுநகர் முனிசிபாலிடியில் நிரந்தரக் கமிட்டிகள் மூன்று ஏற்பட்டிருந்தும் சபையில் கட்சிகள் விசேஷமாக விருந்தமையால் அவை ஒரு வேலையும் செய்யவில்லை. இம் முனிசிபாலிடியின் நிர்வாகம் கட்சிச் சண்டையால் வெகு கேவலமாக விருக்கிறது. சேர்மென் கவுன்ஸிலர்களோடு ஒத்துழைக்க முடியாது போய்விட்டது. இதைப்பற்றி எங்கும் பகிரங்கமாகப்பேச ஆரம்பித்து விட்டார்கள். அதனால் ஆறு மாதம் வரை சபையின் அதிகாரத்தைப் பிடுங்கிவிடவும் நேர்ந்தது. பரிதாபகரமான இவ்விஷயத்தைப்பற்றி பயன் தரத்தக்க விஷயம் எதுவும் சொல்வதற்கில்லை.





# முற்போக்கு.

## டெலிபோனுக்குப் பதில் கூறும் கடிகாரம்.

பாரிஸில் பெரிய கடிகாரம் ஒன்றைப் பாரிஸ் ஆப்ஸர்வேட்டரி நிபுணர் ஹென்ரி டெஸ்பேண்டர் என்பவர் 250 பவுன் செலவில் தயாரிக்கப்போகிறார். அந்தக் கடிகாரம் சரியான மணிகாட்டக் கூடியதாயும் வீட்டிலிருந்தே டெலிபோனில் அந்தக் கடியாரத்தின் நம்பரைச் சேர்த்துக் கூப்பிட்டால் மணி தெரிவிக்கக் கூடியதாயும் இருக்குமாம்.

**பாரசீகத்தில் தேயிலைச் சாகுபடி.**

பாரசீகத்தில் தேயிலைச் சாகுபடி சம்பந்தமாய் மற்றொரு சீன நிபுணரை நியமித்துக்கொள்வதற்கு அனுமதித்து மஜ்லிஸ் சபையில் மசோதா வொன்றை நிறைவேற்றி யிருக்கின்றனர். இதனால் தேயிலைச் சாகுபடி வேலையில் சீன நிபுணர்கள் நியமனம் பெற்றிருக்கின்றனர். மேலும் காட்டிலாகா சம்பந்தமாய் அதிகாரிகள் பிரஞ்சு நிபுணர் ஒருவரை நியமித்திருப்பதாயும் தெரிகின்றது.

**துருக்கியில் மேனாட்டு நாகரீகம்.**

துருக்கியில் மேனாட்டு நாகரீகத்தைப் பரவச்செய்யும் கொள்கை மேற்கொண்டு முன்னேற்ற மேற்பட்டிருக்கிறது. ஸ்திரீகளுக்கு ஓட்டுரிமையளிப்பதான மசோதாவும், ராஜீயக் கட்சிகள் அமைப்பதை அனுமதிப்பதற்கான மசோதாவும் ஜனப் பிரதிநிதி சபையின் விசேஷக் கூட்டத்தில் ஆலோசனைக்கு வரும். ஆனால், புதிதாக அமைக்கப்படும் கக்ஷிகள் குடியாசையும், ஜனநாயகக் கொள்கையையும் மதிப்பதாகவிருக்கவேண்டுமென்று கக்ஷிகள் அமைப்பைப்பற்றிய மசோதாவில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

**5 மைல் உயரம் பறந்தார்.**

ஆகாய விமான பந்தயங்களில் காயமடைந்த காப்டன் ஆர்தர்பேஜ் செப்டம்பர் 2 தேதி மரணமடைந்தார்.

கன்னஸ் நகரத்தைச் சேர்ந்த வில்பொட்மூர் தன்னுடைய ஆகாய விமானத்தில் 28 ஆயிரம் அடி உயரத்திற்குச் சென்றார். இவ்வளவு உயரம் இதற்குமுன் ஒருவரும் சென்றதேயில்லை. அவருடைய விமானத்திலிருக்கும் இயந்திரம் இதை நிரூபிக்கிறது. அவருடன் மிஸ் காம்பெலும் சென்றார்.

**பாலைவனத்தை வளமாக்கல்**

பிரான்ஸிலிருந்து சில ரசாயன சாஸ்திரிகள் ஆபிரிகாவிலுள்ள பாலைவனத்தைப் பயிராக்கும் செழிப்பு நிலமாக்குவதற்காக அப் பாலைவனத்தைப் பார்வையிடுவதற்கென மத்திய ஆபிரிகாவுக்குப் புறப்பட்டிருக்கின்றனர். பாலைவனத்தின் அடியில் நீர்த்தேக்க மிருக்கு மென்றும், பாலைவனமே பல ஆறுகளின் அடிப்புறங்கள் தாமென்றும், அதனால் துரிதமாக அதைச் செழிப்பாக்க இயலுமென்றும் கூறுகிறார்கள். அப்படிச் செய்து விட்டால் 25 லக்ஷம் சதுரமைல்கள் நிலம் நல்ல விளைநிலமாகிவிடுமாம்.

—

# சீனாவில் பூகம்பம்.

## பயிர்கள் நாசமடைந்தன.

## கல்மழை பெய்த கோரக்காட்சி.

கன்சு மாகாணம் சமீபத்தில்தான் கடும் பஞ்சத்தினின்றும் விடுதலையடைந்து செழிப்புற ஆரம்பித்தது. பயிர் பச்சைகள் நல்ல பலனைக் கொடுக்குமென எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் இப்போது நேர்ந்துள்ள பெரிய பூகம்ப அதிர்ச்சியால் அவ்வளவும் பாழடைந்தது. இதுவரை நேர்ந்திராத கடும் அதிர்ச்சியாலும், சூராவளியாலும் அபாரமான சேதமேற்பட்டிருக்கிறது. 40 மைல் நீளத்திற்கும் ஐந்து மைல் அகலத்திற்கும் உள்ள பாகம் முழுவதும் நாசமடைந்திருக்கிறது. சூராவளியுடன் பெய்த மழையைப்போல் சென்ற பல தலைமுறைகளாக பெய்யவில்லையாம். கன்சு மாகாணத்தில் பஞ்ச கஷ்ட நிவாரண உதவியளித்துவரும் மிஸ்டர் பிண்டலே ஆண்ட்ரூஸ் என்பவர் கூறுவதில் 9 அங்குல நீளமும் நான்கு அங்குல அகலமும் உள்ள பனிக்கட்டிகள் இடைவிடாது விழுந்தனவென்று சொல்லுகிறார். இப் பனிக் கட்டிகள் உருக ஒரு இரவு முழுவதும் சென்றதாம். பறவைகளும், ஆடுகளும் கணக்கின்றி மடிந்துவிட்டன. மரங்கள் எல்லாம் மொட்டையிட்டமாதிரி இலைகளற்றுப்போய்விட்டன. ஜூலை 24 ந்தேதியன்று லான்சோவில் பூகம்ப அதிர்ச்சி உணரப்பட்டது. அதில் பலமான சேதம் நேர்ந்திருப்பதாகவும் அநேக ஜனங்கள் அதனால் நாசமடைந்ததாகவும் கூறப்படுகிறது. சமீபத்தில்தான் மன்சு மாகாணத்தில் பூகம்பம் ஏற்பட்டது. அப்போது உயிர்ச்சேதம் அபாரமாக நேர்ந்தது.

—

**தக்க கணவனைத் தேடும் காரிகை.**

போர்னிமௌத்திலிருந்து 24 வயதுடைய ஸைபிள் லாஸிங்டன் என்னும் ஓழுகிய இளம்பெண் தக்க கணவனை வரிக்காடி உலகச்சுற்றுப் பிரயாணம் செய்யப் புறப்பட்டுள்ளாள். அவள் கைச்செலவுக்கென 5 ஷில்லிங்குகள் (ரூ. 3—12—0) தான் எடுத்துக் கொண்டாளாம். அன்றியும் அவளுக்கு இங்லாந்தில் பல மாதங்களாக எவ்வேலையும் கிடைக்கவில்லையாம். அவள் நெடுநாள் சிறந்த பாடகியாக வேலை செய்துவந்தாள். அவள் மூன்றாண்டுகளாக ஒருவனைக் காதலித்திருந்தும் அவன் கைவிட்டு விட்டானும். அவளுக்குத் தாய் தந்தையருமில்லை. வேறெவ்விதக் கட்டுத்திட்டங்களு மில்லையாம். அவள் சுற்றுப் பிரயாணத்தில் இந்தியா அமெரிக்கா, ஆஸ்டிரேலியா ஆகிய விடங்களுக்கும் செல்லுவாளாம்.

—

அமெரிக்காவில் ஜட்ஜ் வேலைகள் 2000 பவுனுக்கு விற்கப் படுகின்றனவாம்.

—

## தாதுபுஷ்டியில் மன்மதனுக்கு ஒப்பாவீர்கள்.

**நீங்கள் என்றுமழியாத இளமைப்பருவத்தை அடைய வேண்டுமோனால் பழனி, ஆர். எம். கே.**

# தங்க பஸ்பம்

## நரசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்.

### தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமே இல்லை.

இது பிரபுக்கள் சாப்பிடவேண்டிய மருந்து. மற்றவர்கள் சாப்பிட்டு தாங்கமுடியாது.

ஒரே வேளையில் கொடுக்கும் பலனைப்பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவரச்செய்து விடுகிறது.

### தாதுபுஷ்டியில் மன்மதனேவென மயங்குவார்கள்.

இதிலமைந்திருக்கும் ஓர் ரகசியம் அபூர்வசக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலை மாலை கொப்பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சீக்கிரத்தில் தாதைக் கட்டி விரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பி வரும்படி செய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பது மகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டாவென்று பிரமிக்கச்செய்கிறது. தாதைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக்கொடுத்து பால்யம், யௌவனம் விருத்தாப்பியம் இந்தப் பருவங்களில் அடைய வேண்டிய காலத்திற்குமுன் அடைந்த விபரீதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமை படையச் செய்வதில் பேர்பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், காசம், க்ஷயம், ஈளை, இருமல், கஷ்டசுவாசம், கோழை, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகலவித காமவியாதிகளும் தீரும். தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றும், விரியத்தைக்கெட்டிப்படுத்தி ஆண்மைக்குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்குமிஞ்சின ஔஷதமில்லை. 100-நாளைக்கு தங்கபஸ்பமும் நரசிங்க லேகியமும் ரூ. 100. 50 நாளைக்குரூபாய் 50 25. நாளைக்கு ரூபாய் 25 சிங்கப்பூர் வாசிகள் சார்ஜு ரூபா 2-ம் சேர்த்து முன்பணம் அனுப்பவேண்டும்.

### நற்சாக்ஷி.

நான் உட்லேண்டு ஸ்டேஷன்மாஸ்டர் மூலமாய் தங்களிடமிருந்து நரசிங்க லேகியமும், தங்க பஸ்பமும் சாப்பிட்டதில் இப்போது புதிபலம் அடைந்திருக்கிறேன்.

S. Jesudasan, Railway Overseer, Woodlands, Singapore

### புத்திரசந்தானம் உண்டாகிவிட்டது.

நற்சாக்ஷி:—எனக்கு விவாகம் நடந்து ஆறுவருடம் வரை புத்திரசந்தானமில்லாமலிருந்தது. தங்கள் தங்க பஸ்பமும் நரசிங்க லேகியமும் தருவித்து 25-நாட்கள் சாப்பிட்டதில் என் குறைகள் பூராவும் தீர்ந்து புத்திர சந்தானமுண்டாகிவிட்டது. இந்த உண்மையை உலகத்தாருக்கு எடுத்தோத முன்வந்திருக்கிறேன். இம்மருந்துகள் தேவஔஷதங்கள் என்று சொல்வது மிகையாகாது. சரீர திடத்தையோ, புத்திக்கூர்மையோ, மன மகிழ்ச்சியையோ மேலாயபுத்திரப்பேற்றையோ விரும்பும் ஒவ்வொருவரும் இம்மருந்துகளை வாங்கிச்சாப்பிட்டால் நினைத்தது லபிக்குமென்பதே எமது துணிபு. தாங்கள் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ எல்லாம் வல்லபிரான் இன்னருள் புரிவாராக.

(Sd) நல்லதம்பி, கட்டுப்பட்டை, சிலோன், 22-2-27.

### ஒரு அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்

1—9—24-ல் கோலாசெலங்கர் டிஸ்டிரிக்ட் ஹாஸ்பிட்டல் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் நமது தங்க பஸ்பத்தைப் பற்றி புகழ்வதைக் கவனியுங்கள்:- அன்பார்ந்த வைத்தியஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை அவர்களுக்கு அதிக பக்தியுடன் எழுதுவது யாதெனில், தங்கபஸ்பமும், நரசிங்கலேகியமும் இரு நோயாளருக்கு 50 நாட்களுக்கு கொடுக்கப்பட்டது. இருவரும் தங்கள்குறைகள் நீங்கி சவுக்கியத்துடனிருக்கிறார்கள். தாங்கள் அருமையாகச் செய்த பஸ்பமும்லேகியமும் யாவராலும் கொண்டாடத்தக்கதே. இன்னும் 100-நாள் தங்கபஸ்பமும் சாலமிசிரி அல்வாவும் ரூ50-க்கு வி. பி. செய்யவும்.

P. Nagalingam Hospital C/o District, Hospital, Kualaselengor

# தாதுபுஷ்டிக்கு

## தங்க பஸ்பம் மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா.

### இழந்துபோன ஆண்மையைத் திரும்பக் கொடுக்கும் இல்லற வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை.

மேகரோகம் கொடிய வியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி சரீரதிடம், அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும், காமகேசரி அல்வாவும், தங்க பஸ்பமும் 100-நாள்மருந்து ரூபாய் 50. 50-நாளைக்கு ரூபாய் 25. 25-நாளைக்கு ரூபாய் 12—8—0

## கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை.

தாது புஷ்டிக்கு இதற்கீடு ஒன்றுமில்லை

பிரபுக்களுக்கு 100 குளிகை ரூபாய் 20. மற்றவர்களுக்கு 100 குளிகை ரூபாய் 10.

### ஒரு அஸிஸ்டெண்ட்ஸர்ஜன் புகழ்வதைக்கவனியுங்கள்.

தங்களின் அருமையும் பெருமையுமானதங்கபஸ்பமும் சாலாமிசிரிலேகியமும் எனதுநோயாளி ஒருவருக்குக் கொடுத்தேன். அவரின் எத்தனையோ விதமான நோய்கள் பஞ்சுபோல் பறந்து போய்விட்டது. இப்போது அவர் நல்ல திடதேகியாயிருக்கிறார். ஆகையால் அடியிற்கண்ட மருந்துகளை அனுப்பவும். தாம்பர பஸ்பம் 80 வேளை ரூ 40. தாளிசபத்திரி சூரணம் 40-வேளை ரூ 5. நரசிங்க லேகியம் தங்க பஸ்பம் ரூ 50. தபால் செலவு ரூ 2. ஆக ரூ 97-க்கு வி. பி. செய்யவும்.

19—1—25

மகா-ள-ள-ஸ்ரீ வைத்திய ஆசிரியாவர்களுக்கு தங்கள் மருந்துகள்யாவும் நோயாளர் யாபேருக்கும் சுகத்தையும் மனத்திருப்தியையும் கொடுத்திருக்கின்றது. தங்கள் மருந்துகளின் அருமையையும் நான் அநேகருக்கு அனுபோக அத்தாக்ஷியுடன் எடுத்துக்காட்டியிருக்கிறேன். தங்கள் மருந்துகளுக்கு சர்டிபிகேட் தேவையில்லை மருந்துகள் தாமே தங்கள் பெயரை எங்கும் விளங்கச்செய்கின்றது. ஆகையால் தாம்பர பஸ்பம், நரசிங்க லேகியம், பவள பஸ்பம், தங்கபஸ்பம் இவைகளை வி. பி. செய்யவும்(ரூ 238-0-0-க்கு) வி. பி. பார்சலில் அனுப்பியிருக்கிறது.

P. Nagalingam Hospital,/o District Hospital, Kualaselengor.

### நற்சாக்ஷி:

### புத்திர சந்தானம் உண்டாகிவிட்டது

ஐயா, எனது நண்பர்களில் ஒருவர் ஆண் தத்துவம் சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார். அநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல்பூச்சுமருந்துகள் உபயோகித்தும், அநேகமருந்துகள் சாப்பிட்டும் கொஞ்சம்கூட குணமாகவில்லை. தங்கள் மேன்மைபொருந்தியதும், உயர்ந்த பலனைக்கொடுக்கக்கூடியதும், மதிக்க முடியாததுமான தங்கபஸ்பம், மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50-நாள் மருந்தும், கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100-ம் தருவித்து 15-நாள் சாப்பிட்டதில்பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும் 10 மடங்கு ஆண்மையையும் கொடுத்துவிட்டது. ஷை வியாதியஸ்தர் பூருமருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூருவையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிறார். தங்கள் ஞாபக சின்னமாக ஷை குழந்தைக்கு "வேலுசாமி" என்கிற தங்கள்நாமத்தையே சூட்டி அழைத்து வருகிறார்.

10-1-29 NATANAM, Sub Inspector of Police, South Arcot Dt.

### வைத்தியஆசிரியர்:

# ஆர் எம் கே வேலுசாமி பிள்ளை

தந்திவிலாசம்: 'வேலுசாமி' பழனி. (71) சித்தவைத்தியசாலை பழனி. S. I. Ry.

(பத்திராதிபர்) சொ. முருகப்பனால் காரைக்குடி குமரன் பவர் அச்சுக்கூடத்தில் பதிப்பித்து, பிரசுரிக்கப்பட்டது.

